# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி




## அம்மாவின் பொய்கள்

பெண்ணுடன் சிநேகம் கொண்டால்
காதறுந்து போகும் என்றாய்
தவறுகள் செய்தால் சாமி
கண்களைக் குத்தும் என்றாய்
தின்பதற்கேதும் கேட்டால்
வயிற்றுக்குக் கெடுதல் என்றாய்
ஒருமுறைத் தவிட்டுக்காக
வாங்கினேன் என்னை என்றாய்
எத்தனைப் பொய்கள் முன்பு
என்னிடம் சொன்னாய் அம்மா
அத்தனைப் பொய்கள் முன்பு
சொன்ன நீ எதனாலின்று
பொய்களை நிறுத்திக் கொண்டாய்?
தவறு மேல் தவறு செய்யும்
ஆற்றல் போய் விட்டதென்று
எனக்கினி பொய்கள் தேவை
இல்லை யென்றெண்ணினாயா?
அல்லது வயதானோர்க்குத்
தகுந்ததாய்ப் பொய்கள் சொல்லும்
பொறுப்பினி அரசாங்கத்தைச்
சார்ந்ததாய்க் கருதினாயா?
தாய்ப்பாலை நிறுத்தல் போலத்
தாய்ப் பொய்யை நிறுத்தலாமா?
உன்பிள்ளை உன்னை விட்டு
வேறெங்கு பெறுவான் பொய்கள்?

—ஞானக்கூத்தன்


ஜூலை 1971
30 காசு

10

# கோணல் வடிவங்கள்

ஆர். இராசேந்திரசோழன்

"அப்படியா சேதி..." பதட்டத்துடன் கேட்டான் அவன். "ஓனக்கு நல்லா தெரியுமா...!"

"சத்தியமா; எங்கப்பானா... உட்டன்னு.."

கிடுகிடுவென வேகமாய் நடந்தான். அறுவடையாகிக் காய்ந்த கழனிகளில் தேய்ந்து வெளுத்திருந்த ஒற்றையடிப் பாதையின் வழியாக மாடுகளை அயட்டி ஓட்டிக்கொண்டே வந்தான். வீட்டை அடைந்தான். கொட்டாய் ஓரம் சுவற்றில் கலப்பையைச் சாற்றி வைத்துவிட்டு மாடுகளைக் கூடக் கட்டாமல் "த, மங்கலட்சுமி, இந்த மாடுவள புடிச்சி தவுடு வச்சி தண்ணி காட்டு; கையோட மொள குச்சில புடிச்சி கட்டிடு. சும்மா கெடக்குது. தோ வர்ரேன்..." என்று அந்த வேகத்திலேயே வெளியேறினான்.

"என்னாத... நீம் மாட்டுனு வந்த வேகத்துக்கு போற; எங்க அம்மாம் அவசரம்..."

"சே சும்மா கெட. போவும் போதே எங்க போறன்னிக்னு..."

தெருப் புழுதியில் காலடிகள் கனமாகப் பதிந்தன. ஒவ்வொரு அடியிலும் புழுதி அரக்கிப் பறந்தது அந்தி ஒளியில் கலந்தது. தெருவே போய் 'சூறி ஊட்டு'ச் சந்து திரும்பிக் குறுக்காக நடந்து அந்தாண்டைத் தெருவை அடைந்தான். வரிசையாய் நாலைந்து பூவரச மரங்கள். நடுவே கோலம் அழிந்த தெரு முற்றம். வீடு. இரண்டு திண்ணைகளுக்கும் நடுவே ரேழி. ஒருக்களித்த கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

நடைக்கு அப்பால் பின்புறம் சமையல்கட்டு. அடுப்பங்கரை. கூழு துழவிக்கொண்டிருந்த அவள் கையில் துடுப்பைப் பிடித்தபடியே நிமிர்ந்தாள்.

"என்னாதை இந்நேரத்துல... திடுக்னு நெனப்பு எடுத்துக்கிச்சாங் காட்டியும்" அவள் கேலியாய்ச் சிரித்தாள்.

"மயிரு எடுத்துக்கிச்சி."

"என்னா... சிடுசிடுன்னுற..." அவள் துடுப்பைப் பானையிலேயே விட்டுவிட்டு அருகில் வந்தாள். உடம்பை உரசினாள். "என்னா கோவம்."

அவளையே ஓட உருவப்பார்த்தான் அவன். அவன் முகம் இறுகிப் போயிருந்தது. கண்களில் ஆவேசம் பொங்கியது.

"இந்தக் கொஞ்சல் எல்லாம் வேணாம்! நேத்து ராத்திரி யார் வந்தது இங்க...!"

அவள் புருவத்தை நெரித்து தனக்குத் தானே யோசித்தாள். "யாருமில்லியே!" புரியாமல் நின்றாள்.

"யாருமில்லியா!" தோரணையோடு கேட்டான் அவன். சந்தேகத்தோடு ஊடுருவினான். "மின்சாமி இங்க வர்ல ராத்திரி..."

"ராத்திரியா!"

"பின்ன பவல்லியா வருவான்..,"

"த.. ஓனக்கு என்னா பயித்தியம் கியித்தியம் புடிச்சிக்கிச்சா யென்னா? அவரு ஏன் இங்க வர்ராரு ராவுல..."

"ஏய்.. எங்கிட்ட புளுவாத. உண்மெய சொல்லிடு" எச்சரிக்கிற பாவனையில் கேட்டான். அழுத்தமாகவும் உறுதியாகவும் கேட்டான்.

அவள் விசித்திரமாகப் பார்த்தாள் "என்னாத்த சொல்லச் சொல்ற...?"

"அத என் வாயால சொல்லச் சொல்றியா...!

"என்னாத நீ பேசறது. ஒண்ணும் குதுர் படாம என்னாண்ணுதான் சொல்லேன்.."

"அதல்லாம் ஒண்ணும் வேணாம். மின்சாமி நேத்து ராத்திரி இங்க ஏன் வந்தான்?" அவன் அதையே மறித்து மறித்துக் கேட்டான்.

அவள் கொஞ்சம் சலிப்படைந்தாள். "த... இங்க மின்சாமியும் வர்ல; சின்சாமியும் வர்ல. சும்மா நீம் பாட்டுனு கேப்பார் பேச்ச கேட்டுக்னு ஒண்ணும் ஆடாதே"

"யாரு நான் ஆடறனா.. நீதான் ஒண்ணும் புடி படாம ஆடற..."

"நான் ஏன் ஆடறேன். நீதான் ஆடற..."

"சீ சும்மா கெட. கூட கூட வாயாடிக்னு ! உண்மெய சொல்லு! மின்சாமி ராத்திரி ஏன் இங்க வந்தான்..."

"யாரு வாயாடறது. நீ கேக்கறது ரொம்ப ஒழுங்கு... நான் எதுனா கேட்டா வாயாடியா."

"இப்ப பாத்துக்னே யிரேன் யிப்ப. அந்த வாயப் புடிச்சி கிழிச்சிடறன்..." அவன் கொஞ்சம் கிட்டத்தில் நெருங்கினான்.

"தா... ஓடேன் அப்படி. என்னாமோ பெருசா பீத்திக்கற... என்னா ஏதுண்ணு ஒண்ணுஞ் சொல்லாத அவன் ஏன் இங்க வந்தான்; இவன் ஏன் இங்க வந்தான்னு... பொலம் புடிக்கறாப் போலக்குது..."

"என்னாமே ஆரோ எவனோண்ற தெம்புல பேசறியா" அவன் தலையை ஆட்டிக் கறுவினான். "கட்டனவனாயிருந்து கேட்டா இப்படிப் பேசுவியா நீ!"

"அந்த ஆம்பளைக்கி துப்பு இல்லாத்துனாலதான் இந்த அளவுக்கு; இல்லாட்டி இம்மா பதஷ்டமா... வெடுக்னு வந்து இந்த வார்த்த கேப்பியா நீ! என்னா துணிச்சலு இருக்கணும் ஒரத்தன் பெண்டாட்டிய பார்த்து இந்தமாரி ஒரு கேள்வி கேக்க."

அவன் டக்கென்று எட்டி அவள் மயிரைப் பிடித்தான்.

"ஏய்... ராத்திரி மின்சாமி இங்க வரலன்னு .."

"சீ கையெ எடு... நீ யாரு என்ன அத கேக்க"

பளாரென்று அவள் காதாம் பட்டையில் அறைந் தான் அவன்.

“ஐயோ!” என்று சுருண்டு விழுந்தாள் அவள். “அடப்பாவி! ஏண்டா ஒனக்கு இந்தப் புத்தி... நல்லா யிருப்பியா நீ... எம்மாத்தரம் செஞ்சி யிருப்பேன் ஒனக்கு. துன்னுப்புட்டு என்னியே ஒதைக்க வர்ரீயே. ஓம் பொண்டாட்டி கூடம் ஒன்ன அன்னுமாரி கெவ னிச்சிருக்க மாட்டாடா... அன்னு மாரில்லாம் சவரட் சண பண்ணனே... கேப்பார் பேச்ச கேட்டுக்னு வர்ரீ யேடா... பாவி!”

கதறி அழும் அவளைப் பார்த்து ஆத்திரத்தோடு பல்லைக் கடித்தான் அவன். “கத்தாத. வாய மூடு!” என்றான். “இப்பகூடம் உண்மெய சொல்லிடு; இல்ல... நீ யார்ரா அவன் என்ன கேக்க... என் இஷ் டம் எப்படி வேணா போவேன்னு சொல்லிடு; நாம் பாட்டுனு போயிடறேன். அப்பறம் எதுனா கேட் டன்னா ஏண்டா கழுதன்னு கேளு... என்னா? ராத்திரி இங்க மின்சாமி வந்தானா யில்லியா!”

“ஏண்டா என்ன இந்த மாரி கொலவாங்கற.. இந்த மாரியாத்தா மேல ஆணையா... அவன் இங்க வரவேயில்லடா...”

“பின்ன யாரு இங்க வந்தது ராத்திரி?”

“அவரு; எங்க ஆம்படையாந்தான் இருந்தாரு.’

“சும்மா திருப்பி திருப்பிக்னு புளுவாத. அவரு தான் நேத்து பொழுதாவே மாடு புடிக்க போறேன்னு சொல்லிட்டுப் பூட்டாரே! அப்புறம் அவருதான் இருந்தாருன்னா...? சொல்லு; ஆரு வந்தது...?”

“பொழுதாவா...! ஆரு சொன்னது ஒனக்கு· காலம்பறதான போனாரு. ராவல்லாம் இங்கதான இருந்தாரு. மத்தியானமே போறேன்னிட்டுத்தான் எங்கியோ போனாரு... அப்புறம் வெளக்கு வக்ற... இந்நேரம் இருக்கும்... வந்தாரு. திரும்பி காத்தால தான போனாரு...” அழுதபடியே சொன்னாள்.

“என்னமே! இங்க யாருகிட்ட டகுள் உடற. அவருதான் மத்யானமே பூட்டாரே...! என்னமோ வெளக்கு வக்ய வந்தாராம்... வெடிஞ்சி போனாராம்... கேக்கறவன் என்னா மணடையில ஒண்ணும் இல்லாத வன்னு நெனச்சிக்னியா...”

“அடப்பாவி! நான் ஏண்டா புளுவறேன். எனக்கு என்னா தலையெழுத்து......ஒங்கிட்ட வந்து புளுவணம்னு. போற மனுஷன் வர்ர மனுஷன்... என்னா நம்பகிட்டியா எதுனா சொல்லிட்டுப் போருரு. அவரு மாட்டுனு வர்ராரு; அவரு மாட்டுனு போருரு. ஒவ்வொண்ணுத்திலியும் குத்தமா யிருக்குது ஒனக்கு. நான் என்னா இந்த சூதெல்லமா பாத்து வச்சிக்னு கிறேன். எத்தினி நாளா நெனச்சிக்னிருந்தியோ... இந்த மாரி ஒரு கத கட்டணம்னு...”

“யாரு! நான் கத கட்டறனா... ஒண்ணுந் தெரி யாத பாப்பா நீ, நான் கத கட்டறேன்...”

“எல்லாந் தெரிஞ்சா ஏன் இப்படி கெடக்கறோம்; ஒங்கிட்ட வந்து சவகாசம் பண்ணிக்னு மின்ன பின்ன பழக்கப்பட்டுக்னதக் கூடம் நெனைச்சி பாக்காம தோ வெடுக்னு. வந்து கேட்டுப் புட்டியே எடுத்தவாய்க்கி... நல்லா யிருப்ப... நம்ப புத்திய செருப்பால அடிச்சிக் கணும்...”

அவள் கண்களைத் துடைத்துக் கொண்டு சொன்னாள். அவன் சட்டென்று குனிந்து முகத்தை நிமிர்த்தினான். கண்களில் உக்ரம் தெறிக்கக் கேட் டான். “என்னா சொன்ன...!”

“சீ கைய எடு அப்பால...”

“ஒதைப்பேன் இப்ப... ஏன் ஒம்புத்திய செருப் பால அடிச்சிக்கணும்... எம் புத்தியவேணா நான் அடிச்சிக்கணும். ஒங்கிட்ட ஓடியாந்து சவகாசம் வச்சிக் னம் பாரு... அதுக்கு!”

“இங்க ஆருன்னா ஓடியாந்து வச்சிக்கோன்னாங் களா...!”

“தேவுடியாமுண்ட! கொலப் பண்ணி போட ணும்மே ஒன்ன... என்னா நெஞ்சுத் தெகிரியம் தெரியுமா ஒனக்கு.”

“ஆருக்கு எனக்கா ஒனக்கா? தெகிரியம் இருந்தவாசிதான் கை நீட்டி அடிச்ச. பொண்டாட் டியா யிருந்தா இம்மாம் பதஷ்டமா அடிப்பியா... பிலு பிலுன்னு புடிச்சிக்னிருக்க மாட்டாளா இந்நேரம்...”

“ஒழுங்கா யிருந்தா நான் ஏன் ஒன்ன அடிக்க றேன்”

“என்னா ஒழுங்கு கெட்டுப்புட்டத ஒங் கண்ணால பாத்துப்புட்ட; ரோஷம் பொத்துக்கிச்சி ஒனக்கு...”

“இந்த மாரிதான் பேசாதன்றேன்”

“பின்ன என்னா பின்ன. நம்பகிட்ட வந்தாளே... அந்தமாரிதான் மத்தவங்கிட்டியும் போயிருப்பான்னு ஒனக்கு... அப்படியே வச்சிக்கோ போ! என்னா பண் ணப் போற...”

“என்னாது? என்னா பண்ணப் போறனா? ஏய் வீணா ஈசாமெய கௌப்பாதே..”

“அடாடடாடா! ஒண்ணுங் கேக்க மாட்டாரு போலக்குது புள்ளாண்டான். கட்டனவங்கூடம் இது வரிக்கும் அந்தமாரி ஒண்ணுங் கேட்டதில்லண்ணா தே வந்துட்டாரு இவரு எங்கருந்தோ... ஆனா ஊன்னா எழுந்து எழுந்து வந்துக்னு...”

“ஏய் என்னா சொன்ன...?” அவன் ஆக்ரோஷத் தோடு அவளை இழுத்துத் தள்ளினான். கத்தையாய் அவள் மயிரைக் கைகளில் பிடித்துக் கொண்டு முகத்தை நெருக்கிக் கேட்டான் “தேய்! ஏன் உன் ஆம்பிடையான் இருக்கும்போதே நீ ஏங்கிட்ட வந்த தெரியுதா...”

“புத்தி கெட்டுப் போயிதான் வந்துட்டேன். தோ தெரிஞ்சிபோச்சே அதும்பொவுஷா. போருதா!”

“வீணா கதையெல்லாம் வேணாம். வம்பு வளத்தன அப்புறம் என்னா நடக்கும்னு தெரியாது”—“ஏன் வந்த? நெனப்பு கீதா!”

அவள் பேசாமலிருந்தாள்.

“ஏதோ நீயும் தப்பு பண்ணிட்ட. நானும் தப்பு பண்ணிட்டேன். போவட்டும் இது வரிக்கும் நம்ப பழக்கமானதுலருந்து ஒம்புருஷன் வர்ரதப் பத்தி எப்பனா எதுனா நான் வாயெத் தொறந்து கேட்டுருப்

பனா... ஏதோ கட்டனவனுச்சே; அதுகூடம் இல்லண்ணு அப்புறம் அவனுக்குஎன்னாருக்குது; அவனும் கண்டுங்காணாத மாதிரி பெரும் போக்காப் போயிடறானேண்ணு நானும் அதபத்தி ஒன்ன ஒண்ணுங் கேட்டுக்கற தில்ல; இல்லியா:.."

"இது என்னாடியிது வம்பு... அவர இவரு கேட்டுக் கறதில்லியாமே... நல்லா கிதே ஞாயம். கேட்டுத்தான் பாரேன் என்ன நடக்குதுன்னு."

"சும்மா ஒளராத; இதுவரிக்கும் அத்தப்பத்தி எதுனா அத்தா குத்தமா கேட்டுருப்பனா அது வரிக்கும் சொல்லு..."

"......"

"இத்தினி நாளுமாதிரி இப்படியே போய்க்னு இருந்துட்டா ஒண்ணும் வரப்போறதில்ல; ஒம் புருஷனத் தாண்டி 'இன்னொரத்திங்கிட்டியிம் போற'ன்னா... எனக்கு எப்படியிருக்குது தெரியுமா?"

"......"

"ஏய்... என்ன நான் கேக்கக்கேக்க நீம்பாட்டுனு வாயெத் தெறக்காம கிற. என்னா பண்ணிப்புடுவான்ற வுதப்பா..."

"பின்ன என்ன ஊருமேல போனேன்னு சொல்றியா...!"

"சீ சும்மா கெட. நெனைக்க நெனைக்க எம்வவுரே எரியுதுமே...!

"எரிஞ்சா எரியட்டுமே... என் கொல பதைக் கறது எனக்குத்தாண்டா தெரியும் பாவி. கண்ணு எதுர நாக்கு அழுவிடப் போவுது பாரேன்... வெளங்கவா போற நீ! பொண்ணு பாவம் பொல்லாதுன்னுவாங்க; பாத்துக்னே இரேன். என்ன கெதில போறன்னு..."

"பெரிய பத்தினி இவ...! சாபம் குடுக்கறா."

"அவுசாரிதான் நானு. இல்லண்ணா சொல்றேன்..."

"இந்த மாரிதான் பேசி ஈசாமைய கௌப்பாதன்றேன். நெசத்த சொல்லிடு. நாம் பாட்டுனு போயிடறேன்..."

"என்னா நெசத்த!"

"மின்சாமி இங்க வந்தத"

"சீ! ஒங்கிட்ட ஆரு பேசுவா... வெறிச்சிப் பேசுவாளா ஒங்கிட்ட... ஒருதாட்டிதான் சொல்லுவா ஒரு பொம்பள. நல்ல மாட்டுக்கு ஒரு சொல்லு..."

"அப்ப அவன் இங்க வந்தான்றியா?"

"ஆமா வந்தான்! நானும் அவனும் ராவல்லாம் ஒண்ணாத்தான் படுத்துக்னு கெடந்தோம். எங்க போயி பஞ்சாயத்து வச்சிக்கிறியோ வச்சிக்கோ போ!"

பளாரென்று அறைந்தான் அவன். "ஐயையோ ஆம்பள இல்லாத ஊட்ல பூந்து இந்தமாரி அக்ரமம் பண்றானே .. ஆருங் கேப்பாரில்லியா? ஐயோ!" என்று கதறினாள் அவள்.

"கத்தாத. கம்முன்னு வாயெ மூடிக்கோ. தெருவு சிரிச்சிப்புடும் இன்னிக்கி. மெய்ய சொல்லிடு இப்ப... சொல்லிட்ட இத்தோட பூட்டேன்."

"நான் என்னத்த சொல்லுவேன்..." அவள் ராகம் வைத்து அழுதாள். அவன் தப தபவென்று இரண்டு கைகளாலும் மாறி அறைந்து கீழே தள்ளி வயிற்றில் எட்டி உதைத்தான். "அவுசாரி முண்ட இன்னியோட ஒழிஞ்சுபோ! என்னியும் அவனாட்டம் இளிச்ச வாயன்னு நெனைச்சிக்னியா...!" அவன் கீழே குனிந்தான்.

"ஐயோ ஐயோ... உடுரா பாவி! ஐயோ இவன் பாட்டுனு அடிச்சிக் கொல்றானே! நான் ஆருகிட்ட போயி சொல்லுவேன்... ஐயோ ஐயோ... உட்டுர்ரா பாவி, உட்டுர்ரா... இல்லடா இல்ல... ஒன்னத்தவற நான் ஆருகிட்டியுமோ போவலடா. எங்க ஆம்பளையும் ஒன்னியும் தவற ஆரு கிட்டியுமே போவலடா. ஐயோ! என்னை என்ன இந்த மாரி சாவடிக்கறானே. கல்பூரம்னா வாங்கியாடா அவிக்கறேன்."

அவள் கண்களிலிருந்து தாரை தாரையாய் வழிந்தது. சாணமிட்டு மெழுகிய தரையில் கொட்டியது. உதட்டோரும் பல்பதித்த காயத்திலிருந்து ரத்தம் கசிந்தது. அவள் விக்கி விக்கி அழுதாள். "எனக்கு வோணும்...இதுவும் வோணும்; இன்னமும் வோணும் ...கட்டனவனுக்குத் துரோகம் பண்ணம் பாரு அந்த பாவம்.. அனுபவிக்கறேன்...'

"உன்ன ஆருன்னா துரோகம் பண்ணச்சொன்னாங்களா" அவன் அவள் முகத்துக்கு நேரே உறுமினான்

"போதுண்டா அப்பா! போதும் போ நீ! ஒன்னோட அனுபவிச்ச சொகமும் போதும்...பட்டதும் போதும்...இன்னமும் ஒதைக்கவராத நீ, ஒடம்பு ஒண்ணும் உறுதியா இல்ல. உன் சவகாசமே வேணாம்போ ஒனக்கு ஒரு கும்புடு; அது...க்கு ஒரு கும்புடு... அடி மாரியாத்தா எனக்கு இந்தக் கெதியா வரணம்..."

"ஒக்காந்து ஒப்பாரி வச்சிக்னு இரு. ஒங்கிட்ட பேசிக்றதுல ஒண்ணும் புரயோசனம் இல்ல...அவன் கால ஒடிச்சா எல்லாம் தானா செரியா பூடும்..."

அவன் வேகமாக வெளியேறினான். 'மவன இண்ணைக்கு எலும்புக்கு எலும்பு எண்ணி எடுத்துடறேன்'' என்று முனகிக் கொண்டான். அந்தி மங்கிய கசகசப்பான இருள். தெரு கம்மலாயிருந்தது. ஒதிய மரத்தில் பக்கம் குப்பை மேட்டோரம் ஒற்றையடிப் பாதை வழியாய்ச் சந்தில் திரும்பி நடந்து மின்சாமி வீட்டை நெருங்கினான். திண்ணையில் ராந்தலைக் கொளுத்திவைத்து நாலைந்து பேரோடு சீட்டு விளையாடுவதைக் கண்டான். கர்ஜித்தான்.

"டாய் ..மின்சாமி"

குனிந்து சீட்டைப் பார்த்துக் கொண்டிருந்தவன் திடுக்கிட்டு நிமிர்ந்தான். "என்னா!" தலையை ஆட்டிக் கேட்டான்.

"அந்த ஏழுமலை கையில சீட்டக்குடுத்து இப்பிடி ரவ வாயேன் இங்க"

(13-ம் பக்கம் பார்க்க)

# தனக்கான மந்திர உபாசனைகள்

நா. சேதுராமன்

இவன் பள்ளியில் படிக்கும்போது திருப்பதி மலைகளில் பஸ்ஸில் பிரயாணம் செய்வதில் உள்ள பயங்கரத்தைப்பற்றி அநேகர் சொல்லக் கேட்டிருக்கிறான். ஆனால் அவர்களில் யாருக்கும் இங்கே பிரயாணம் செய்த அனுபவம் கிடையாது இவனும் திருப்பதி போயிருக்கிறான். ஆனால் அது அவனுக்கு சென்னை நகரின் ஓவர்பிரிட்ஜ் ஒன்றின்மேல் பிரயாணம் செய்வதான உணர்வையே கொடுத்தது ஆனால் இங்கே அப்படி இல்லை. ஸ்டேஷனில் இருந்து திருப்பதியிலிருக்கும் எந்த விதமான சாலைப் பாதுகாப்புகளும் இல்லாத கடுமையான மலைப் பாதைகளின் வழியே பதினாறு மைல் பயணம், பிராஜெக்டுக்கும் ஊருக்கும் போய்ச்சேர்வதற்கு. திருப்பதியில் வளைவுகளில் காப்புச் சுவர் கட்டியிருப்பார்கள். இவனுக்கு அதைக் கண்டாலே பிடிக்காது. பலமுறை அவற்றைப் பார்த்து வெறுப்புடன் முகத்தைச் சுளித்திருக்கிறான். ஒரு வேளை இந்தப் பதினேழாண்டுகள் இடைவெளியில் இங்கேயும் காப்புச் சுவர் கட்டிவிட்டார்களோ என்று நினைத்தான். இரண்டு மூன்று திருப்பங்களில் கவனமாகப் பார்த்தான. இல்லை! திருப்பங்களின் விளிம்புகளுக்கப்பால், அமைதி நிரம்பியதொரு மனோபயத்தை உண்டாக்கக் கூடிய நேரிறக்கமான சரிவுகளை, சுவரின் இடையீடின்றி கண்டு ரசித்ததில் உதட்டோரத்தில் நெளிந்த புன்னகை கன்னங்களில் விகசித்து இமைகளை இறக்கியது. முன் சீட்டிலிருந்து சாராய நெடி வீசியது. இப்பொழுது தன்னை ஊரில் யாரும் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாது என்று நினைத்தான். அவ்வளவு பெரியவனாக வளர்ந்து விட்டிருந்தான்.

பஜார் தெருவுக்குப் போயிருந்தான். அந்த ஊருக்கே விசேஷமான சைக்கிள் டியூப் துண்டை ஓபனரில் வைத்து சோடா உடைக்கும்போது ஏற்படும் அதிவிசித்திர ஒலி, அங்கொன்று இங்கொன்றாகக் கேட்டுக் கொண்டிருந்தது. தான் சிறுவயதில் அப்பாவோடு அடிக்கடி போய்க் கொண்டிருந்த ஓலைவேய்ந்த ஓட்டல் இப்போது ஜிங்ஷீட் போட்டு சிமெண்ட் சுவர் கட்டப்பட்டிருந்ததைக் கவனித்தான். பாதி நுரையும் கால்வாசி காப்பியுமான 'ஒருகப்' காப்பியை நினைத்துக் கொண்டான். உள்ளே போய் காப்பி சாப்பிட வேண்டும்போல் தோன்றியது.

ப்ராஜெக்ட் ஹவுஸின், இரண்டு பக்கமும் புல்தரை விரிந்த சிமெண்ட் நடைபாதை வழியாகப் போகும்போது ஓரங்களில் புதைக்கபபட்டிருந்த கூம்பு வடிவக் கற்களைக கவனித்தான். சிறுவயதில் தான் விளையாடும்போது விழுந்து அடிபட்டுக் கொண்டது நினைவிற்கு வந்தது.

படிகளில் ஏறி வராண்டாவில் நின்று சுற்றும் முற்றும் பார்த்தான். கேன்டீனில் போய் உட்கார்ந்து கொண்டு சூழ்நிலையை அனுபவிக்க வேண்டும் என்று தோன்றியது. சர்வர் கொண்டு வந்த ரோஸ்மில்கை ஸ்ட்ராவினால் அளைந்துகொண்டே வராண்டாவைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு பெண் பெருக்கிக் கொண்டிருந்தாள். அவள் பக்கவாட்டில் திரும்பி துடைப்பம் வீசிக்கொண்டே வந்து வாசற்படி நடுவில் இருந்த நாதாங்கித் தொளையிலிருந்து மண்ணை விரலால் வெளியே எடுத்துப் போட்டாள். அப்பொழுது அவள் முகம் சரியாகத் தெரிந்தது. அவன் நினைவில் பொறை தட்டியது. சிலநிமிட நேரத்தில் அவள் 'ரத்னம்ம' என்று தெரிந்ததில் வியந்தான். அவள் மேலும் துடைப்பத்தை வீசிக்கொண்டு வாசற்படியை விட்டு நகர்ந்து மறைந்தாள். அவள் இவனைக் கவனிக்கவில்லை என்று இவனுக்குத் தோன்றியது. கவனித்திருந்தாலும் அவளால் அடையாளம் தெரிந்து கொள்ள முடியாது என்று நினைத்தான்.

ரத்னம்ம இவனைவிட ரொம்பப் பெரியவள். பாவாடை தாவணி போட்ட வயதிலும் இவனுடைய வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். பள்ளிக்கு எதிரில் தூரத்தில் கெனால் வெட்டி மலையாகக் குவிக்கப் பட்டிருந்த கற்களுக்கு அந்தப்புறம் இவனும் அவளும் பலப்பக் கற்கள் பொருக்கும் பொழுதில் எத்தனையோ முறை அவள் மடியில்சாய்ந்து...... அவனுடைய நினைவு தெளிவாகப் பின்னடைந்ததில் அவனுடைய மனம் வினோதமான நிலையில் லயித்தது. ரோஸ் மில்க் அருந்தி முடித்ததும் அவளை மறுபடியும் பார்க்கலாம் என்று எழுந்து வராண்டாவில் அவள் சென்ற வழியில் சென்றான். சிறிது தூரம் நடந்தான். அவள் ஒரு மூலையில் அமர்ந்து முலை சுவைத்துக் கொண்டிருந்த குழந்தையின் தலையைக் கோதிக் கொண்டிருந்ததான ஒரு காட்சி இவன் மிடறு வெடியும் வெறுப்பில் நிலைத்தது.

இவன் படித்துக் கொண்டிருந்தபொழுது ஜிங்ஷீட் கூறையாக இருந்த பள்ளிக்கூடம் கட்டிடமாக உருவெடுத்திருப்பது இவன் கண்களில் விழுந்தது. பந்துலு காருவை வீட்டில் போய்ப் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொணடான். அவர் இப்பொழுது ஹெட்மாஸ்டர் ஆகிவிட்டார் என்று அபபா எழுதியிருந்தது நினைவு வந்தது அவரிடம் தான் இங்லீஷில் பேசவேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

ஸ்டோருக்குப் போய் ஏதாவது வாங்கவேண்டும் என்று தோனறிய நிலையில அவன் கௌண்டரை அடைந்தபோது பில்போடும் ஆளை உற்றுப் பார்த்தான். ராமாராவ்தான். தோற்றத்தில் மாற்றம் தெரிந்தது உடல் சற்று உப்பலாகவும், தலை நடுவில் எடுத்த வகிடும் பாதி நரைத்த முடியும் அப்படியொன்றும் ஆளை அடையாளம் தெரியாமல் அடித்துவிடவில்லை. அப்பொழுது அவர் பொட்டலம் சட்டிக் கொடுத்துக் கொண்டிருந்தார். தான் ஒவ்வொரு தடவை சாமான் வாங்க வரும்போதும் சாமான்கள் பொட்டலம் கட்டிக் கொடுத்தபின்பு அவரிடம் கொசுராக வாங்கிய பிஸ்கெட்டுகளை வீடுவரை வரவேண்

டுமே என்ற நோக்கில் சிறுகச் சிறுக முன்னம் பற்களால் கொறித்துக் கொண்டு சென்றதான ஒரு காட்சி நினைவில் தோன்ற அவன் கொடுத்த கால்கேட் பேஸ்டை வாங்கிக் கொண்டு ராமாராவை ஒரு பார்வையில் நிறைத்து சூன்யமானதொரு சோக உணர்வுடன் வெளியே வந்தான்.

முன்பெல்லாம் இந்த மலையிலிருந்து அந்த மலையிலிருக்கும் இடங்களுக்குச் செல்வதற்குப் படகில்தான் ஆற்றைக் கடக்க வேண்டும். அப்பொழுது அணை பாதியளவுகூட உயர்ந்திருக்கவில்லை. ஆனால் இப்பொழுது அணை ஏறக்குறைய முடியும் நிலையில் இருப்பதால் அணைக்குள்ளேயே இருக்கும் சுரங்கப் பாதை வழியாக நடந்து செல்லலாம் என்று அப்பா கடிதத்தில் ஒருமுறை எழுதியிருந்தது நினைவுவர அவ்வழியில் விரைந்தான். ஒரு சமயம் ஆற்றில் வெள்ளம் வந்தபோது அணை நடுவில் எழுந்திருந்த ஒரு தூணின் மேல் இருந்த தொழிலாளி மட்டும் சிக்கிக்கொள்ள அவனைச் சுற்றிப் பிரவகித்துச் சென்றதான வெள்ளத்திடையே அவன் நின்ற காட்சியை இரண்டு பக்க மலைகளில் இருந்தும் பார்த்துக் கொண்டிருந்த ஆயிரக் கணக்கான ஜனங்களில் இவனும் அப்பாவோடு இருந்தது நினைவுவர, அந்த மனிதன் 'தானே' என்னும் அலைவில சுரங்கப் பாதையிலிருந்து வெளியே வந்தான்.

இந்த சுடுகாட்டுப் பொட்டலில் இருக்கும் மண்ணைப்போல் வேறெங்கும் அவன் பார்த்ததில்லை. அவ்வளவு வெள்ளை வெளேரென்ற அந்த மண் மலைப் பாறைப் பொடிசல். சிறிய கலர் பாலிதின் பைகளில் இவன் அதைப் போட்டு வீட்டில் அழகுக்காக வைத்திருக்கிறான். இப்பொழுது மண் சற்று அதிகமாகவே பழுப்பேறியிருந்தது தெரிந்தது. கையில் அள்ளிப் பார்த்தான். தூசு ஒட்டியது. முன்னம் தூசு கிடையாது. சர்க்கரைத் துகள் போன்ற மணல் இவன் கைகளில் பளபளக்கும். சுடுகாட்டுக்குச் செல்லும் பிணம் இந்த வழியாகத்தான் செல்ல வேண்டும் அப்பொழுதுதான் ப்ராஜெக்டும் ஊரும் தோன்றியிருந்த காலமாதலால் பிணங்கள் அத்தனை சென்றிருக்காத நிலையில் அந்த மணல் வெண்மை கொடுத்தது. இப்பொழுதோ எத்தனையோ பிணங்கள் போயிருக்க வேண்டும் என்று நினைத்துக்கொண்டான். தான் அங்கே அடிக்கடி சுற்றிக் கொண்டிருந்ததை பலரால் சொல்லக் கேட்டதால் தனக்கு வீட்டில் நடக்கும் மந்திர உபாசனைகளை நினைத்துக் கொண்டான்.

'டைகர்வாலி'யின் பசுமை அதிகரித்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது. இரண்டு பக்கச் சரிவுகளில அமைந்த கீரைப் பாத்திகளும் அவைகளை எல்லையாக உட்புறம் வளர்ந்திருந்த சிவந்த நெற்பயிர்களும் இடையில் அமைந்ததான பாதையில் இவன் செல்வதும் பரந்ததொரு தரைவிரிப்பில் தான் நடப்பதான எண்ணத்தை இவனிடம் தோற்றுவித்தது. சிறிது தூரம் நடந்தபின் மண் திட்டின் மேல் அமைந்திருந்த குடிசை இப்பொழுது வலிமையுடனும் முன்பில்லாத மூங்கில் வேலியுடனும் இருக்கக் கண்டான், முன்பு அங்கிருந்த 'எலமந்த'வை நினைத்துக் கொண்டான்.

அந்தக் கிழவன்தான் இந்த வயல்களையும் தோட்டத்தையும் கவனித்துக் கொண்டிருந்தான். அவன் முண்டாசும், அந்த முண்டாசின் தொடர்ச்சியாகப்பின் தலையிலிருந்து ஜடையைப் போல் தொங்கும் துணியையும் நினைத்துக் கொண்டான். தான் பலமுறையும் அந்தத் துணியை இழுத்து விட்டிருப்பது நினைவுவர குடிசையருகில் சேர்ந்து பார்வையைப் படரவிட்டான். அந்தக் கிழவன் எப்பொழுதோ இறந்துவிட்டிருப்பான் என்று தோன்றியது. இவன் இங்கு வரும் போதெல்லாம் தன்னை மடியில் அமர்த்திக் கொண்டு தான் பலமுறை எழுந்திருக்க முயன்றும் பலவித உபாயங்களால் தன்னை எழுந்திருக்கவிடாமல் செய்து நெடுநேரம் தொடைகளை ஆட்டிக் கொண்டிருக்கும் கிழவனின் செயலுக்கான காரணம் பல ஆண்டுகள் கழித்துத் தனக்குத் தெரிந்ததான நினைவு வருகையில் குடிசை வாயிலிருந்து ஒரு பெண் வெளியே வந்தாள். வந்தவள் இவன் நிற்பதைக் கண்டவளாய் வியந்த கண்களின் வியப்பு கண்டுகொள்ளல் அரிதாகும்படி பின்புறத் தலையை அசிங்கமாகச் சொறிந்துகொண்டு உள்ளே திரும்பினாள்.

இவன் மேலும் நகரத் திரும்பினான். பள்ளத்தாக்கின் கிழக்குச் சரிவிலிருந்து வெள்ளைக் களிமண் வளையல்கள் முழுவதும் மறைத்த முன்னங் கைகளும் கண்ணாடித் துண்டுகள் மின்னும் சிவந்த பாவாடைகளும் வரிசையாகத் தெரிந்தன. லம்பாடிப் பெண்கள்! இவன் உற்சாகமடைந்தான். சரிவின் அந்தப்புறம் இருக்கும் காட்டிலிருந்து விறகொடித்துக் கொண்டு வருகிறார்கள் என்பது தெரிந்தது. அவர்கள் அவன் அருகில் வர ஐந்து நிமிடங்களுக்கு மேலாகும் எனத் தோன்றியதில் சிகரெட்டை எடுத்து பற்ற வைத்தான். புகை உயர்ந்தெழும்பியதான நிலையைக் காண உயர்ந்த கண்கள் தூரத்து மேல் விளிம்பில் அமைந்த தண்ணீர் டாங்கியும் அதிலிருந்திறங்கும் கனத்த குழாயும் கண்டன. அதற்கு நேர் எதிரில் சாலையைக் கடந்தால் சினிமா கொட்டகை என்று நினைவுவர அங்கேயும் போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். கால்காப்புகளின் ஓசையும், உடைகளின் சலசலப்பும் திருப்பிய இவன் பார்வையில் ஏழெட்டு லம்பாடிப் பெண்கள் நெருங்கினர். அவர்களின் கண்களின் பார்வை இவனில் பட்டு அவைகளினுள்ளேயே நிலைத்ததான உணர்வு தோன்றியது. தலைமேல்இருந்த விறகுச் சுமையைவிரல்கள் அணைத்ததால் பாதி தெரிந்த செம்மையான சில மார்பகங்கள் இவனுள் ஏற்படுத்திய வெம்மை, காலடியில் நசுங்குகிற சிகரெட்டில் மாய்வதை சிலவற்றின் கண்கள் சன்னமாய்க் கவனித்தனபோல் இருந்தது. ஊருக்குப் போவதற்குள் ஒரு முறை அனுபவம் கொள்ள வேண்டுமெனத் தோன்றிய விரைவில்,

தன்னை அழைக்கும் குரலில் திடுக்கிட்டுத் திரும்பினான். அப்பாதான். ஜன்னலுக்கு வெளியில் பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தார். வண்டி நின்று பலநிமிட நேரங்கள் சென்றிருக்க வேண்டும் என்று தோன்றியது. ஓரிருவர் தங்களுடைய கடைசிச்சாமான்களை இறக்கிக் கொண்டிருந்தனர். எதிர்ப்பக்கத்தில் ஒருவன் பெஞ்சுக்கடியில் ஏதாவது சாமான் விட்டுப் போயிருக்கிறதா என்று குனிந்து பார்த்துக் கொண்டிருந்தான். இவன் சூட்கேசுடன் கீழே இறங்கினான்.

---

## ஒரு மினி கேள்வி

குறுகத் தரித்த
குறளைப் புகழ்பவர்,
அப்படிச் செய்த
என்னை ஏன் முறைக்கிறார்?

—நீலமணி

# ஒரே நூற்றாண்டில் முப்பது நூற்றாண்டுகள்

இந்திரா பார்த்தசாரதி

இன்று தமிழ் இலக்கியத்துக்கும் தமிழ்த் திரைப் படத்துக்கும் தமிழ் நாடகத்துக்கும் கிட்டியுள்ள அவல நிலைபோல் வேறு எந்த இந்திய மொழியின் கலைத் துறைக்கும் ஏற்படவில்லை என்பதுகசப்பான உண்மை. 'மக்கள் எந்த விதமான அரசாங்கத்துக்குத் தகுதியுடையவர்களோ அதைப் பெறுகிறார்கள்' என்ற அரசியல் கருத்து இலக்கியத்துக்கும் பொருந்தும் என்று செயலற்று இருந்துவிட வேண்டியதுதானா? இதைப் பற்றி நீங்கள் சிந்திக்க வேண்டுமென்பதுதான் இக் கட்டுரையின் நோக்கம்.

காலத்துக்கு ஏற்றவாறு மரபைத் தோற்றுவித்துக் கொள்ளக் கூடிய தமிழ் மொழியின் இலக்கண, இலக்கிய ஆற்றல்தான் இதை ஒரு வாழும் மொழியாக இதுவரைக் காப்பாற்றிக் கொண்டு வந்திருக்கிறது. இலக்கியத்தைப் பொறுத்தவரையில், புதிது, பழையது என்று ஒன்றும் இல்லை. அந்தந்தக் கால இலக்கியக் கோட்பாடுகளும், சிந்தனைகளும், அந்தந்தக் கால மதிப்புக்களுக்கேற்ப வடிவங்கள் கொள்கின்றன. கம்பனைப் போல் ஏன் ஞானக் கூத்தன் பாடவில்லை என்றோ அல்லது ஞானக் கூத்தனைப் போல் ஏன் கம்பன் பாடவில்லையென்றோ கேட்பது இலக்கிய அறியாமை. ஓர் அநுபவம் இலக்கியப் பிரக்ஞையுள்ள ஒருவனை அந்தக் குறிப்பிட்ட காலத்துக்குரிய முறையில் எப்படிப் பாதித்திருக்கிறது என்பது தான் அடிப்படையான விஷயம். ஆனால் 1971-ல் பதினெட்டு நூற்றாண்டுகள் காலெண்டரை பின்னோக்கிக் கிழித்து விட்டு சுற்றி நிகழும் புதிய மாறுதல்களைக் காண மறுக்கும் ஒரு கண்மூடித்தனத்தோடு பழமையை நினைத்து அசைபோடும் அப்பாவித் தனம் நம்மைக் கோமாளிகளாகத்தான்காட்டும் அதற்காக ஒன்றின் தொடர்ச்சியாகத்தான் மற்றொன்று ஏற்படுகிறது என்ற உண்மையையும் நாம் மறந்து விடக் கூடாது. புதிது, பழையது என்ற சொற்களுக்கு அவை அளவில் பரிபூரணமான அர்த்தம் கிடையாது. ஒன்றின் தொடர்பாகத் தான் மற்றொன்றுக்குப் பொருள். இன்று புதியதாக இருப்பது நாளை பழையதாகிவிடலாம். இதை மனத்தில் கொள்ள வேண்டும்.

இது 1971-ம் ஆண்டு. விஞ்ஞான முன்னேற்றத்தால் பிரபஞ்சமே குறுகிக் கொண்டு வருகிறது. நாமறிந்த கெடியார—காலெண்டர் கணக்கெல்லாம் போய் ஒளி—வருஷங்களைப் பற்றிப் பேசும் காலம். வெளி (Space) பரிபூரணமானது, காலம் பரிபூரணமானது என்ற கருத்து பழங்கதையாகப் போய்விட்டது. பத்தொன்பது நூற்றாண்டுகளாக மேல் நாடுகளில் படிப்படியாக நிகழ்ந்த லௌகிக உலகத்தின் விஞ்ஞானச் சிந்தனை இயக்கங்களினால் பாதிக்கப்படாமல் இருந்து வந்த நம்மை ஒரே நூற்றாண்டில், இவ்வியக்கங்கள் அனைத்தும் சேர்ந்து தாக்குகின்றன. 'நம்மை' என்று சொல்லும் போது சிறுபான்மையாக இருக்கும் அறிவு ஜீவிகளை மட்டும் குறிக்கிறேன். சிறுபான்மையராக இருக்கக் கூடிய காரணத்தினால்தான் இருபதாம் நூற்றாண்டில் மேல் நாட்டில் ஏற்பட்டுள்ள வியக்கத்தக்க மாறுதல்களைப் பற்றிய இவர்கள் பிரக்ஞை, தமிழ்நாட்டில் ஜனநாயக ரீதியாகப் பரவியுள்ள, பண்பாட்டு வழிவந்த ரசனையைக் கண்டு—இருபதாம் நூற்றாண்டு விளைவித்துள்ள சிந்தனைப் புரட்சியினால் எந்த விதத்திலும் பாதிக்கப்படாத ரசனையைக்குறிப்பிடுகிறேன்- அதிர்ச்சிகொள்ளுகிறது.

இருபதாம் நூற்றாண்டில் ஏற்பட்டுள்ள சிந்தனைப் புரட்சி என்ன வென்று முதலில் விளக்க விரும்புகிறேன். பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடர்ச்சியாக இருபதாம் நூற்றாண்டு காலக் கணக்குப்படி இருந்தாலும், ஒவ்வொரு நூற்றாண்டையும் தொடர்ந்து அடுத்த நூற்றாண்டில் உண்டான இயல்பான படிப் படியான மாறுதல்களைப் போலல்லாமல், தொடர்ச்சியே அறுபட்டுப்போன நிலையில் ஒரு புதிய உலகத்தை நாம் இன்று காண்கிறோம். 'சரித்திரம் ஒரு குப்பைத்தொட்டி' என்று ஹென்றி ஃபோர்டு கூறியது எவ்வளவு உண்மையென்று நமக்கு இப்பொழுது புரிகிறது. 1900-ல் Max Planck தம்முடைய Quantum Theoryயை உலகுக்கு அறிவித்தார். ஃப்ராய்ட் என்ற ஒரு புதிய மேதையை உலகம் கண்டு கொள்ளத் தொடங்கியது. 1903-ல் மனிதனை ஆகாயத்தில் பறக்க விட்டார்கள் ரைட் சகோதரர்கள். ஐன்ஸ்டீன் 1905-ல் நியூடனின் உலகம் என்ற தெய்வத்தின் மீது முதல் கல்லை விட்டெறிந்தார். Wassily Kandinsky என்பவர் abstract ஓவியம் வரைந்து உலகைத் திடுக்கிட வைத்தார். 1914-ம் ஆண்டு ஏற்பட்ட முதல் உலகப் போர் பொருளாதாரச் சிக்கல்களையும் சமுதாயக் குழப்பங்களையும் உண்டாக்கிச் சர்வதேச ரீதியாக அரசியல் ஒழுக்கம் குறைவதற்குக் காரணமாயிற்று. தொழில் முன்னேற்றம் அடைந்த நாடுகளில் தொழிலாளர் புரட்சி உண்டாகிக் கம்யூனிஸம் ஏற்பட வகை செய்யுமென்ற கனவு கண்ட மார்க்ஸின் கணக்கு தவறு என்று நிரூபித்து போல் ஐரோப்பாவிலேயே மிகவும் பின் தங்கியிருந்த நாடாகியரஷ்யாவில் புரட்சிஉண்டாகிபொதுவுடைமை அரியணை ஏறியது. ஜெர்மானியப் பேரறிஞன் நீட்சேயினுடைய தத்துவத்தினின்றும் கிளைத்த நாஸிஸம் சற்று அயர்ந்திருந்த உலகத்தை நிமிர்ந்து உட்கார வைத்தது. கம்யூனிஸத்தின் விலையாக லட்சக்கணக்கான மக்கள் ரஷ்யாவில் இறந்தது போல் ஜெர்மனியில் ஒரு தனி மனிதனுடைய கோபம், லட்சக்கணக்கான யூதர்களைக் கொன்றது. இதைத் தொடர்ந்து ஏற்பட்ட உலகமகாப் போரில் ஹிட்லரை நல்லவனாக்கிய ஹிரோஷிமா—நாகஸாகி நிகழ்ச்சி ஏற்பட்டது. ஒரே கணத்தில் லட்சக்கணக்கான மக்களைச் சாக அடிக்கக் கூடிய மாபெரும் சக்தியை மனிதன் கண்டு பிடித்தான். எல்லாவற்றுக்கும் முத்தாய்ப்பாக அமைந்தது, சந்திரனை அண்டை வீடாக்கிய மனிதனின் சாதனை.

மேல் நாடுகளில் மனிதனின் இக்காலச் சிந்தனையை இந்நிகழ்ச்சிகள் எப்படி உருவாக்கியுள்ளன என்பதை அவர்களுடைய இலக்கியத்தினின்றும் இன்னும் மற்றைய கலைத்துறைவாயிலாகவும் அறிகிறோம். 19-ம் நூற்றாண்டில் ஜனநாயகமும், விஞ்ஞானமும் சேர்ந்து, கலைத்துறைக்கு நடுத்தர வர்க்கம் என்றபுதிய சமூகப் பிரிவை அறிமுகப் படுத்தின. அச்சு இயந்திரங்கள் சோஷலிஸ ரீதியாகப் பெரும் அளவில் பரவிய ரசனைக்கு ஈடு கொடுக்கும் முறையில் புத்தகங்களை வெளியிட்டன. 'பரவிய ரசனை என்றால் முழு மன நிலை ரசனை என்று அர்த்தமல்ல' என்று ஹக்ஸ்லி கூறியதை இவ்விடத்தில் நினைவில் கொள்ள வேண்டும். நடுத்தர வர்க்கம் என்ற இப்புதிய சமூதாயப் பிரிவினர் தம்மைச் சமூகத்தின் பாரம்பரிய பண்பாட்டுக் காவலர்களாக நியமித்துக் கொண்டதின் காரணமாக போலித்தனம் என்பது வாழ்க்கையின் மேல்வரிச் சட்டமாக வழங்கலாயிற்று. இந்நிலையில்தான் இருபதாம் நூற்றாண்டு நிகழ்ச்சிகள் மனிதனின் சிந்தனையை ஆவேசமாகத்தாக்கின.

'1859-ல் கடவுள் இறந்தார்' என்று சொல்லப்படுவது வழக்கம். அந்த ஆண்டுதான் டார்வின் மனிதனின் தோற்றம்பற்றி எழுதித் தம புத்தகத்தை வெளியிட்டார். மனிதனுக்கு நம்பிக்கை ஊட்டும் அளவுக்கு கடவுளுக்கு நிகரான வேறொரு கருத்து மனிதனின் சிந்தனையைக் கவரவில்லை. இதனால் விளைந்த ஏமாற்ற நிலையில்தான் இருபதாம் நூற்றாண்டு வந்தது. சர்வசக்தி படைத்த கடவுளுக்குப் பதிலாக விஞ்ஞானமும் ஜனநாயகமும் தோற்றுவித்த ஒரு சர்வ சக்தியான சமுதாயம் உருவாகி விதியை எதிர்த்துப் போராடிய பழம் கிரேக்க இலக்கியக் கதாநாயகர்களைப் போல், மனிதன் தன்னுடைய தனித்தன்மை வாய்ந்த உருவத்தை இழந்து, அதற்காகப் போராட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இச் சூழ்நிலையில் தோன்றியவர்கள் தாம் காஃப்கா, ஜய்ஸ், ஃபாக்னர் போன்ற இலக்கிய ஆசிரியர்கள். கடவுள் என்ற அஸ்திவாரத்தின் மீது எழுந்த கட்டடம் இடிந்து விழுந்த பிறகு, மனிதன் உலகில் பிறந்து விட்டதினால் வாழ வேண்டுமென்ற காரணத்தினால், வாழ்க்கை என்றால் என்னவென்று புனராலோசனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மனிதன் ஒருவனால்தான் இவ்வாறு சிந்திக்க முடியும் என்பதையும் கவனிக்க வேண்டும். நிகழ்ச்சிகள் ஏற்பட்ட பிறகுதான் நாம் அவற்றைப் பற்றி யோசிக்க முடியுமே வொழிய 'யாரோ சொல்லி விட்டுப் போனார்கள்' என்பதற்காக ஆதிக்கம் செலுத்தும் நுண்மையான கொள்கைகளின் (abstract theories) அடிப்படையில் நம்வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியாது. அப்பொழுது அப்பொழுது தோன்றுகிற இடைக்காலப் பிரச்னைகளைப் பற்றிய தாற்காலிக சிந்தனையில்லாமல், வாழ்க்கையைப் பற்றி முழுவதும் கோவையாகச் சிந்தித்ததின் விளைவாகப் பல கேள்விகள் எழுந்தன. கேள்விகளுக்குக் கணித ரீதியாகச் சரியா, தப்பா என்ற விடைகள் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. 'தத்துவம் ரொட்டி சுட்டுத்தராது' என்பது ஒரு பழமொழி. இத்தகைய சிந்தனைப் போக்கினால் உலகில் மனிதனின் தனிமை இன்னும் தீவிரமாக உணரப்பட்டது. பிறவி, தன்மை, மரணம்—ஆகிய மூன்றைப்பற்றி மேலும் அதிகமான அளவு சிந்திக்கும்படியாக, Frankensteinஉருவெடுத்த விஞ்ஞானமும், காலாவதியாகிவிட்ட சமுதாயக் கோட்பாடுகளும், பாதுகாப்பு இல்லாத உலகமும் மனிதனைத் தூண்டின. ஆகவேதான் இருபதாம் நூற்றாண்டு இலக்கியத்தில் ஓர் ஒதுங்கியதன்மையைக் (alienation) காண்கிறோம். இறந்த காலத்தினின்றும துண்டிக்கப்பட்ட ஒரு நிலையில், கடவுள் என்ற கருத்துடன் உடன்பாடு கொள்ள முடியாத அவஸ்தையில், தனக்குத் தானே—தான் மனிதன் யார் என்று நிர்ணயிக்க வேண்டும் என்ற ஒரு எக்ஸிஸ்டன்ஷியலிஸ நிர்ப்பந்தத்தில் சிந்திக்கக் கூடிய ஒவ்வொரு மனிதனும் முழு பிரக்ஞையும் குழம்பாத ஸிஷோப்ரெனிக்காக இருப்பது தான் இயற்கையோ என்று எண்ணும், நிலை ஏற்பட்டிருக்கிறது.

இத்தகைய சூழ் நிலையின் அடிப்படையில்தான் Nabokov வின் 'Pale Fire', ஜீனேவின் 'Our lady of the flowers',Grassன் 'The Tin Drum', பெக்கெட்டின் 'Watt' டையும் Anthony Burgessன் 'A clock work Orange' யையும் Updikeன் 'The Centaur' யையும், Joseph Heller ன் 'Catch -22' யையும் படிக்க வேண்டும் அப்பொழுதுதான் இவர்களுடைய இலக்கிய நேர்மை நமக்குப் புரியும். Roy Mc Muller கூறுகிறார்: 'Ultimate reality is not made of waves and particles but rather bundles of abstract events, possibly discontinuous and finally un-knowable' விஞ்ஞானத்தைப் பற்றி அவன் கூறும் உண்மை வாழ்க்கைக்கும் பொருந்தும். யூக்லிட் கண்ட உலகம் இப்பொழுதில்லை என்பதுதான் இன்றைய யதார்த்தம். இந்தக் கண்ணோட்டத்தின் அடிப்படையில் பார்த்தால்தான் இக்காலத்திய இலக்கிய நூல்கள் ஏன் இவ்வாறு அமைந்திருக்கின்றன என்று புரிந்து கொள்ளலாம். பத்தொன்பது நூற்றாண்டுகளாக எந்த வித மனச் சலனமுமில்லாமல் ஏற்றுக் கொண்டிருந்த கொள்கைகள் சிதறுண்ட நிலையில், அதிர்ச்சிக்குஉள்ளான மனிதன், தன் அதிர்ச்சிக்கு இலக்கிய உருவம் கொடுக்கிறான். அதன் காரணமாகத்தான், இக்காலத்திய எழுத்தில் ஓர் அசாதாரணமான மூல சக்தி (raw power) இருக்கிறது அதிர்ச்சியை வெளியிடுவதற்கு இதைக் காட்டிலும் வலுவான காரணம் இல்லை. பெக்கெட்டின் கதையொன்று சேற்றில் ஊர்ந்து செல்லும் ஒரே நிர்வாணமான மனிதனைப் பற்றியது. Anthony Burgess ஹைவேயில் செல்லும் மனிதர்கள் மீது காரைச்


# கசடதபற

(ஒரு வல்லின மாத ஏடு)

தனி இதழ் : 30 காசு

ஆண்டுச் சந்தா : ரூ 3/-

சந்தா அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய முகவரியைத் தெளிவாகக் குறிப்பிடவும். ஒவ்வொரு மாதமும் 7தேதிக்குள் 'கசடதபற' இதழ் சந்தாதாரர்களுக்குக் கிடைக்காவிட்டால் உடன தெரிவிக்கவும். கதை, கட்டுரை, கவிதைகள் அனுப்புகிறவர்கள் பிரசுரிக்க இயலாதவற்றைத் திரும்பப் பெற போதிய தபால் தலையுடன் அனுப்பி வைக்கவும்.

ஆசிரியர் : 'கசடதபற'

1 தேவடி தெரு

சென்னை-4

செலுத்தி மிகிழும் அலெக்ஸ் என்ற இளைஞனைப்பற்றிக் கூறுகிறார் Norman Mailer கொலை, பாலுறவு ஆகிய வற்றைப்பற்றி, ஒரு மனிதனின் தினசரி நிகழ்ச்சிகளைச் சொல்லுவது போல, மிகச் சாதாரணமாக எழுதுகிறார். மனித இனத்தையே ஒரு கணத்தில் அழித்து விட லாம் என்ற அச்சம் எப்பொழுதுமிருந்து கொண்டிருக் கும் போது, மனிதத்துவத்துக்கே அர்த்தமில்லாமல் போய், விஞ்ஞானமும், ஜனநாயகமும் வளர்ந்து விட்ட சமுதாய பூதம் தனிமனிதனை விழுங்கி ஜீரணித் துக் கொண்டிருக்கும் போது, கூட்டத்தினின்றும் ஒதுங்கியவர்கள் தங்கள் இருப்பை இப்படிக் கூக்குர லிட்டுத் தெரிவிக்க வேண்டியிருக்கிறது. 'The lone wolf has to howl more intensely than a member of the pack' என்பார்கள்.

இருபதாம் நூற்றாண்டில் அறிவுத் துறைகளைத் தனித் தனியாகப் பகுத்து முத்திரையிட முடியாது. விஞ்ஞானமும், கலையும் வெவ்வேறு உலகங்கள் என்ற நினைவு போய், ஒன்றன் கருத்து இன்னொன்றைப் பாதிக்குமளவுக்கு மனிதனின் சிந்தனை வளர்ந்து வரு கிறது. இக்காலத்திய கவிதை, முன் நூற்றாண்டு கவிதைகளோடு கொண்ட தொடர்பைக் காட்டிலும், ஒரு abstract ஓவியத்துடனே அல்லது சொல்லப் போனால் Quantum mechanics கொள்கையுடனே இன்னும் அதிகத் தொடர்புடையதாக இருக்கலாம். ஸ்டீபன் ஸ்பெண்டர் கவிதையொன்றைப் பாருங்கள்:

'Now over these small hills they have built the concrete
That trails black wire;
Pylons, those pillars
Bare like nude, giant girls that have no secret'

இது விஞ்ஞான—தொழில் முன்னேற்றக் காலத்திய கவிதையாகத்தான் இருக்க முடியுமென்று நிச்சயமாகச் சொல்லிவிடலாம். Pablo Neruda வின் கவிதை புரிந் தும் புரியாமலும் ஒரு abstract ஓவியம் போல் இருக் கிறது. 'கவிதை ஏதோ தெரிவிக்க முயலுமே யன்றி அதைப் புரிந்து கொள்ளவேண்டிய அவசியமில்லை' என்பது T. S. Eliot வாக்கு.

'If you ask me where I have been
I must say it happens
I must speak of the soil which the stones obscure
Of the river that enduring destroys itself
I know only the things that the birds lose
The sea left behind, or my sister weeping!

நாவல் ஒரு கதையை மட்டும் சொல்லத்தான் எழுதப்படுகிறது என்பது பழங்காலக் கருத்து. வண் ணத்தை வண்ணமாகக் காண வேண்டுமென்று ஓவி யர்களும், நிகழ்ச்சிகளை நிகழ்ச்சிகளாகவே காண வேண்டுமென்று நாடக ஆசிரியர்களும் ஒரு புதுவகை யான இயக்கத்தை இக்காலத்துக்கு ஏற்ப உருவாக்க வரும் போது, கதையை ஏற்கெனவே தீர்மானித்து, திட்டமிட்டு அதன் மூலம் உலகை உய்விப்பதற்கான கருத்துக்களை, கதாபாத்திரங்கள் என்ற உருவங்கள் மூலம் காட்டவேண்டுமென்று நாவலாசிரியன் முயன் றால், அவன் எவ்வளவு நூற்றாண்டுகள் சிந்தனையில்

## உருப்படாதவர்கள்

அம்புக்குக் குறிபார்ப்பர்
ஆசைக்குக் குறிபார்ப்பர்
நம்பிக்கை யோடு வளம்
நாட்டக் குறிபார்ப்பர்
மரத்தடியில் குறத்தியிடம்
குறிபார்த்தல் உருப்படவா?

—நீலமணி

---

பின் தங்கிவிடுகிறான் என்பதைத்தான் காட்டும். G. S. Fraser கூறுகிறார். "A novel is never an exposition of a previously determined scheme of ideas; but is instead merely an exploration of the variety of life through realistic prose narrative in the hope of finding a pattern." பரிபூரணம் என் பதற்கு அர்த்தமில்லை என்று விஞ்ஞானம் நிரூபித்து விட்டது. நாம் காணும் இவ்வுலகில் கதாநாயகர் களுக்கும் கதாநாயகிகளுக்கும் வில்லன்களுக்கும் இட மில்லை என்று அறிந்து கொண்டால்தான் இக்கருத்து நமக்குப் புரியும்.

எந்த விதமான மனத்திரைகளும் இல்லாமல் மனி தனை அவனுடைய சுய உருவில் காண முயன்ற ஃப் ராய்ட் தத்துவத்தின் காரணமாக, இருபதாம் நூற் றாண்டில் நாடகம், மனிதவாழ்க்கையை மேற்பூச்சு இல்லாமல் அப்படியே படம்பிடித்துக்காட்ட முயல் கிறது. நவீன நாடக இயக்கம் 1811-ல் தொடங்கியது என்று சொல்லலாம். அதுதான் இப்ஸனின் Ghosts வெளிவந்தவருஷம். அதற்குப் பிறகு 'The naturalist Theatre', 'Symbolist Theatre', 'The Theatre of the absurd', The Theatre of the Derision', 'The Epic Theatre', TheAnti-Theatre,' 'the Happenings' என்று பல விதமான முத்திரைகளோடு நாடக இலக்கியம் வளர்ந்தாலும் இவற்றை ஓர் அடிப்படையான வேறு பாட்டுடன் காணலாம். 'எல்லாமேமாறிவிட்டது' என்று கோபிபவர்கள் 'ஒன்றுமே மாறவில்லை' என்று கோபிப்ப வர்கள் என்று மனித சமுதாயத்தை Osborne இரண்டு வகையாகப் பிரித்திருப்பது போல நாடக உலகமும் இப்பொழுது இயங்கிக் கொண்டிருக்கிறது. இவை 'majority theatre' 'minority theatre' என்று மேல் நாடுகளில் பொதுவாக அழைக்கப் படுகின்றன.

இக்கால நாடகங்களின் பொதுவான அம்சம் 'total theatre' என்பது. வெறும் இலக்கிய அனுபவத் துக்காக மட்டும் நாடக ஆசிரியர்களைப்பற்றி Peter Brook என்ற பிரபல நாடக இயக்குநர் கூறுகிறார்:

"He is a poet, but not a poet of words, he is a poet of words acted, of scenes-set, of players performing!" Samuel Beckett ன் Waiting for Godot இதற்கு ஒரு சிறந்தஎடுத்துக்காட்டு. சொற்கள் காட்சி களுடன் பிரிக்க ஒண்ணாதபடி இணைந்து உணர்ச்சிகள் கதாபாத்திரங்களின் பாவனை மூலம் உருவாக்கிப் பின்

சொற்களாக வெளிவந்து இந் நிலையில் இவை அனைத்தும் ஓர் இசை ஒழுங்குடன் அமைகின்ற கட்டுப்பாடே சூழ்நிலையே—நவீன நாடக அமைப்பாகும் நவீன நாடகங்கள் வெற்றிபெறுவதற்குக் கதாசிரியன் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் அவ்வாசிரியனின் தகுதிக்கு இணையான நாடக டைரக்டர். டென்னஸி வில்லியம்ஸின் வெற்றிக்கு முக்கிய காரணம் எலியா காஸான் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இதுவரை நான் சொன்ன கருத்துக்களின் பின்னணியில் இக்காலத் தமிழ் இலக்கியத்தை நாம் ஆராயும்போது, அறிவு ஜீவிகளுக்கு வேதனை ஏற்படுவது இயல்பு. Hans Enzensberger என்ற ஜெர்மானியக் கவிஞன் சொன்னான் :

'The minority has the majority,
The dead are out voted' என்று. தமிழகத்தில், 'the majority still has the majority, the dead are haunting us' என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. சிறுத்துவிட்ட உலகத்தின் சிந்தனை இயக்கங்களால் பாதிக்கப்பட்ட இலக்கிய ஆசிரியர்கள் சிறுபான்மையராய் இருக்க இன்றும் தமிழ் நாடு தான் பிரபஞ்சம் என்று நினைப்பவர்கள் பெரும் பான்மையராய் இருந்துவருகிறார்கள். தமிழ் நாட்டில் சமுதாயப்புரட்சியைப்போல் ஒன்று ஏற்பட்டது என்பது உண்மைதான். ஆனால் மேல் நாட்டில் இத்தகைய புரட்சிக்குக் காரணமானவர்கள் மிகப் பெரிய சிந்தனையாளர்களாக இருந்தார்கள் என்ற அதிர்ஷ்டம் நமக்கில்லை. இரண்டாம் தரத்துக்கும் குறைவான இத்தமிழ் நாட்டுச் 'சிந்தனையாளர்கள்' இலக்கியம், நாடகம், திரைப்படம் ஆகியவற்றில் தலைமையை ஏற்கத் தொடங்கியதின் காரணமாக அதற்கேற்ப நம்முடைய இக் காலக் கலைத்தரமும் அமைந்து விட்டது என்று சொல்லாம்.

தமிழ் நாட்டில் சமுதாயப் புரட்சியைப் போல் ஒன்று ஏற்பட்டது என்று நான்சொன்னேன். இதற்கு விளக்கம் தேவையாக இருக்கலாம். புரட்சி என்றால், ஜாதியின் பெயராலும், பொருளாதாரச் சீரழிவாலும் துன்பப்படும் மக்களிடத்து, 'உங்கள் துயரத்துக்கு இதுதான் காரணம்' என்று, 'ஒரு நாயைச் சுட்டிக் காண்பித்து, அதைத் தூற்றிக் கல்லெறிந்து, தூக்கிப் போடுவது' மட்டுமல்ல. கடவுளைப் பீடத்திலிருந்து இறக்கித் தாம் அதில் ஏறி உட்கார்ந்து கொள்வது மல்ல...சிவ வாக்கியர் பாடலொன்று நினைவுக்கு வருகிறது.

'ஊரிலுள்ள மனிதர்காள் ஒரு மனதாய்க் கூடியே
தேரிலே வடத்தை விட்டுச் செம்பை வைத்து
இழுக்கிறீர்...'

ஒரு சமுதாயப் புரட்சி ஏற்பட்டிருந்தால் உண்மையாகவே அச் சமுதாயப் புரட்சிக்குக் காரணமானவர்கள், புத்தரைப் போலவோ அல்லது ஏசுநாதரைப் போலவோ அல்லது லெனினைப் போலவோ மிகப் பெரிய சிந்தனையாளர்களாக இருந்திருந்தால், நம்முடைய இலக்கியம் இப்பொழுது இருக்கக்கூடிய இந்நிலையில் இருக்காது என்று உறுதியாகக் கூறலாம். சமூகத்தில் கிடைக்கக்கூடிய சில்லறைப் பலன்களைப் பகிர்ந்து கொள்ளுவதற்கான ஓர் இடைக்கால எழுச்சிதான் புரட்சி என்ற போர்வையை அணிந்து கொண்டது எனலாம். பரவலாகப் பார்க்கும்போது, பத்தொன்பதாம் நூற்றாண்டு தமிழனுக்கும், இக்காலத்திய தமிழனுக்கும் சிந்தனை வளர்ச்சியைப் பொறுத்த வரையில், ஒரு மாறுபாடும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. முன்பு சமயத்தின் பேரில் கடவுளைக் கோயிலில் வைத்துக் கும்பிட்டான்; இன்று ஜனநாயகத்தின் பேரில் மனிதனை தெய்வமாக்கிக் காலில் விழுந்து வணங்குகிறான். நம் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள 'புரட்சி' இவ்வளவுதான்.

பழைய தமிழ் இலக்கியம், தமிழ் நுண் கலைகள் ஆகியவற்றின் வாரிசாகப் பிறந்த நமக்கு அவற்றின் தரத்துக்கு இணையான தகுதி இருந்தால்தான், அவற்றினின்றும் மாறுபட்டு புதிய இயங்களைத் தோற்றுவிப்பதற்கான தன்னம்பிக்கை ஏற்படும். அத் தகுதி இல்லாத ஒரு தாழ்வு மனப்பான்மையின் காரணமாக அவற்றைப் பற்றியே வாய் வலிக்கப் பேசிக் கொண்டிருப்பது ஒரு சுலபமான பயிற்சி. அரசியலாளர்கள் தம்மை இலக்கியவாதிகளாகக்கூறிக் கொள்ளும்போது இப்பயிற்சிக்கு இலக்கிய அந்தஸ்தும் கிடைத்து விடுகிறது. ஆட்சியிலுள்ளவர்களை எதிர்த்துத் தம் கருத்தை வலியுறுத்திய ஒருசிந்தனைப் பாரம்பரியம் தமிழ்நாட்டில் மிகவும் அருமையாகத் தான் இருந்திருக்கிறது. தொல்காப்பியத்தில் 'செவியறிவுறூஉ' என்ற ஒரு துறை காணப்படுகிறது. அரசன் தவறு செய்தால் அவனுக்கு நியாயத்தை எடுத்துக் கூற வேண்டிய கவிஞர்களின் பொறுப்பை இத்துறை விளக்குகிறது. புறநானூற்றில் இத்துறையின் கீழ் சில பாடல்கள் இயற்றப் பட்டுள்ளன. திருமழிசை யாழ்வார் பல்லவ மன்னனைப் பாட மறுத்ததை பற்றிய வரலாற்றுச் செய்தியொன்றுண்டு. மகேந்தர பல்லவனுடன் முரண்பட்டு யாமார்க்கும்குடியல்லோம்' என்று திருநாவுக்கரசர் பாடியிருக்கிறார். கம்பர் சோழ அரசனுடன் மாறுபட்டதாக ஒரு செய்தியும் நாம் கேட்கிறோம்...ஆனால் இவற்றையும் இன்னும் ஒரு சில நிகழ்ச்சிகளையும் தவிர ஆட்சியாளர்களைத் திருப்தி செய்தே பலனடைந்து வந்திருக்கிறது நம்முடைய சிந்தனைப் பாரம்பரியம். ஆகவே இக்காலச் சூழ்நிலையில் ஒரு புதுமையும் இல்லை என்று சொல்லத்தான் இதைக் கூற வந்தேன்.

வெள்ளையர் ஆட்சி ஏற்படத் தொடங்கிய காலத்தில், புதியதொரு நாகரிகக் கலப்பின் காரணமாக

---

## தவம்

கொக்கின்
ஒற்றைக் கால்
தவத்தில்
பற்றுக் கோல்
அலகில்
கெண்டை மீன்
துள்ளியதும்
வெற்றுத் தூண்டிலுடன்
நான்
வீடு திரும்பினேன்
இரண்டு
கால்களால் நடந்து.

—ப. கங்கைகொண்டான்

மக்களுடைய சிந்தனையிலும், வாழ்க்கை மதிப்புக்களைப் பற்றியும், ஏற்பட்ட மாறுதல்களைக் குறிப்பிடும் இலக்கிய ஆசிரியர்கள் யாருமே தமிழில் இருந்ததாகத் தெரியவில்லை. ஓர் ஆனந்தரங்கம் பிள்ளை டைரியை மட்டும் வைத்துக் கொண்டு, இக்கூற்றை மறுக்க முடியாது. இச் சமயத்தில்தான் நடைமுறை வாழ்க்கைக்குப் புறம்பான சிற்றிலக்கியங்கள், புற்றீசல்கள் போல ஏராளமாகப் பெருகின. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழில் முப்பெரும் நாவல்கள் தோன்றின. ஆனால் வங்காள மொழியில் இதே காலத்தை யொட்டி ஆரம்பமான நாவல் இலக்கியம் மேலும் மேலும் பரவலாக வளர்ந்து இன்று ஒரு தனிச் சிறப்பைப் பெற்றிருக்கும்போது, தமிழ் இலக்கிய வளர்ச்சி பரவலாக இல்லாமல் முப்பெரும் நாவல்கள் ஊட்டிய நம்பிக்கை சிதைந்து, இப்பொழுது ஒரு குறுகிய வரையறையினரால்மட்டும் அனுபவிக்கப் பட்டு வருகிறது என்பதுதான் இம்மொழியின் துர்பாக்கியம். வங்காள மொழியிலும், மராத்தியிலும், மலையாளத்திலும், இலக்கிய ரசனையுள்ள பல வாசகர்கள் இருக்கிறார்கள்; தமிழில் இலக்கியம் ஒரு consumer product ஆக இருக்கிறது என்பதை நம்மால் மறுக்க முடியாது. இதற்குப் பிரபல பத்திரிகைகள் ஒரு முக்கியமான காரணம்.

இலக்கியத்தை முழுநேரப் பணியாகக் கொள்ளும் ஓர் இலக்கிய ஆசிரியன் பத்திரிகைகளை நம்பித்தான் வாழ வேண்டும். தனியாகப் புத்தகங்களை வெளியிட்டு அவனால் ஜீவனம் நடத்த முடியாது. அவன் புத்தகங்களைத் தனியாக வெளியிட பிரசுராலயங்களும் தயாராக இல்லை.

தனியாகப் புத்தகம் போட்டு ஒரு சிலரால் பலனடைய முடிந்ததென்றால் அதற்கு வேறு பல காரணங்கள் உண்டு. Journalismத்துக்கும், இலக்கியத்துக்கும் வேறுபாடு அறியாத குழப்பத்தில், பத்திரிகைகளும், இலக்கிய ஆசிரியர்களும், தாங்கள் இலக்கியப் பணி செய்து வருவதாக நம்புவதைக் கண்டு நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. சமீபத்தில் தமிழ் நாட்டில் அரசியல் தலைவர்களுக்கும், திரைப்பட நட்சத்திரங்களுக்கும் வித்தியாசம் இல்லாமல் போய்விட்டது; திரைப்படக்காரர்கள் அரசியல் தலைவர்களாக வந்தது இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம் ஆகவே இன்று நாம் பார்க்கும் பிரபல தமிழ்ப் பத்திரிகைகள், அவை நம்பும் மானசிகமான 'இலக்கியப் பணி'யைத் தாங்கள் தொடர்ந்து நடத்துவதாகத் திருப்தி பட்டுக்கொள்ள வேண்டுமென்றால், அரசியல் தலைவர்களையும், திரைப்பட நட்சத்திரங்களையும், இலக்கிய ஆசிரியர்களாக ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை யென்று உணரத் தொடங்கி, அவ்வாறே செயல்பட்டு வருகின்றன. வாசகர்கள் இதைத்தான் வேண்டுகிறார்கள் என்பது அவர்கள் இதற்குக் கூறும் சமாதானம். இது தமிழ்நாட்டுக்கு மட்டும் உரிய அவல நிலை... சராசரிக்கும் சற்று அதிகமான வாசகர்களுக்கென்று நடத்தப்படும், ஒரு லட்சத்துக்கும் சற்று கூடுதலாக விற்கும், மலையாள மாத்ரு பூமியைப் போல், அந்தத் தரமும், பிரபலமும் வாய்ந்த தமிழ்ப் பத்திரிகை தமிழ் நாட்டில் இல்லை என்பது வெட்கக் கேடு.

தமிழில் புதியனவற்றை ஏற்றுக் கொள்ளுவதற்கான ஓர் எதிர்ப்பு, சரித்திரப் பூர்வமாகப் பார்க்கும் போது என்றுமே இருந்ததில்லை என்றுதான் தோன்றுகிறது. இந்த மனப்பான்மை கடந்த நூற்றைம்பது வருஷங்களாகத்தான் இருந்து வருகிறது. இதற்கு அரசியலும் ஒரு வகைக் காரணமாக இருக்கலாம். பழைமையானவை யெல்லாம் தூய்மையானவை; புதியனவற்றுக்கு இடமில்லை' என்று கருதும் பத்தாம் பசலிப் போக்கும், 'பழையனவை யெல்லாம் குப்பைக் கூடை; நான் இப்பொழுது எழுதும் எழுத்துதான் இலக்கியம்' என்ற அசட்டுத் தனமும் இக்காலச் சிறுமை; தமிழ் மொழிக்கும், இலக்கியத்துக்கும் ஒரு தொடர்ச்சி இருந்து வந்து கொண்டிருக்கிறது என்றால் பழையன கழிதலும், புதியன புகுதலும் கால வழுவல் என்ற கருத்தை இலக்கணத்தில் ஒப்புக்கொண்டு ஆதரித்த விவேகந்தான். கடந்த இருநூறு வருஷத்திய தமிழர்களைக் காட்டிலும் முன்னிருந்தவர்கள் புத்திசாலிகள் என்பதை இது வலியுறுத்தும்.

இலக்கியத்தில் இதுதான் சொல்லப்படவேண்டும் இது சொல்லப்படக் கூடாது என்ற வரையறையை தொல்காப்பியர் எதிர்க்கிறார். இது உங்களுக்கு ஆச்சர்யத்தைத் தரலாம்.

''அறக்கழிவு உடையன பொருட்பயம படவரின்

வழக்கென வழங்கலும் பழித்தன் றென்ப''

உலக ஒழுக்கத்துக்கு மாறுபட்ட செய்திகள், பொருட் சிறப்புடன் நல்ல முறையில் கூறப்பட்டால், அவற்றையும் இலக்கிய வழக்கமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது இதன் கருத்து. புதிய சிந்தனை என்பது மட்டுமல்லாமல், அச்சிந்தனையைத் தெரிவிக்க பழைய மரபு போதாவிட்டால், புதிய இலக்கிய மரபைத் தோற்றுவிக்கலாம் என்கிறது தொல்காப்பியம்.

விருந்தே தோறும்
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே'

என்று 'விருந்'தை விளக்குகிறார் தொல்காப்பியர். 'புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல் வழியின்றித்தானே தோற்றுவித்தல்' என்கிறார் இளம்பூரணர்.

தற்காலத்தில் மேல் நாடுகளில் நாம் காண்கின்ற நம்பிக்கையின்மையும், ஏமாற்றமும், மரபு எதிர்ப்புணர்ச்சியும், ஓர் ஒதுங்கிய தன்மையும், சொற்களுக்கு அலங்காரம் செய்யாமல் அப்படியே சொல்லுகின்ற ஒரு மூலசக்தியும் (Raw Power) நம் நாட்டுச் சித்தர் பாடல்களிலே பார்க்கிறோம். உதாரணத்துக்குச் சில பாடல்களை மட்டும் கூறுகிறேன்.

பறைச்சியாவது ஏதடா பணத்தியாவது ஏதடா.
இறைச்சிதோல் எலும்பினும் இலக்கமிட்டு இருக்குதோ
பறைச்சிபோகம் வேறதோ பணத்தி போகம் வேறதோ
பறைச்சியும்பணத்தியும்பகுத்துப்பாரும் உம்முளே

---

## காரணம்

பாதி மதித்-தலைப்

பரமன் படைத்த

உலகம் வேறே

எப்படி இருக்குமாம்?

—நீலமணி

வாயிலே குடித்தநீரை எச்சல் என்று சொல்லுநீர்
வாயிலே குதப்ப வேத மெனப்படக் கடவதோ
வாயில்எச்சில்போக என்றுநீர் தனைக்குடிப்பீர்காள்
வாயில் எச்சில் போன வண்ணம வந்திருந்து
சொல்லுமே.

நட்டகல்லைத் தெய்வமென்று நாலு புஷ்பம்
சாற்றியே
சுற்றிவந்து மொண மொண வென்று சொல்லும்
மந்திரம் ஏதடா
நட்டகல்லும் பேசுமோ நாதன் உள்ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிச்சுவை அறியுமோ?

இவை யாவும் சிவ வாக்கியர் பாடல்கள்.

மரணம்என்ற யதார்த்தத்தை எதிர்நோக்கத் துணிவில்லாமல் வாழ்க்கையினின்றும் தப்பித்துக் கொள்ள தென்றல், நிலா, பெண், இன்பம் என்று பேசும் Romanticist களைப் பாம்பாட்டிச் சித்தர் எப்படிச்சீறுகின்றார் பாருங்கள்.

"நாறிவரும் எச்சில் தனை நல்லமுதமென்றும்
நண்ணுஞ்சளி நாசிதனை நறுகுமிழ் என்றும்
கூறுவார்கள்...புத்தியில்லாக் கூகை மாந்தர்கள்"

இக்காலத் தமிழ் இலக்கியத்தின் துர்பாக்கியம் சித்தர் மரபைப் புரிந்து கொள்ளாதவர்கள் பெரும்பான்மையாக இருப்பதுதான். சித்தர் மரபும், பார்க்கப்போனால் எஸ்டாபிலிஷ்மென்டோடு ஒட்டாமல் இருக்கிறது. இது ஆராய்ச்சிக்குரிய விஷயம்.

நான் தொடக்கத்தில் இருபதாம் நூற்றாண்டில் எல்லாத்துறைகளிலும் ஏற்பட்டு வரும் மாறுதல்களினால் பாதிக்கப்பட்ட சிறுபான்மையராகிய தமிழ் நாட்டு அறிவுஜீவிகள் என்று குறிப்பிட்டேன். இது ஆங்கிலம் அல்லது வேற்று மொழி அறிவு உடையவர்கள் எல்லாரையும் குறிப்பிடுமா என்று கேட்கப் படலாம். வேற்று மொழி அறிவு இருந்தால்தான் இவ்வாறு பாதிக்கப்படுவார்கள் என்று சொல்ல முடியாது. ஆங்கில அறிவு இல்லாமலேயே, சமூக இயல் விஞ்ஞானிகளுக்குத் தேவையாக இருக்கக்கூடிய செய்திகளை எளிமையாகவும் அடக்கமாகவும் அழகாகவும் கூறியுள்ளார் டாக்டர் உ. வே. சாமிநாதஅய்யர் 'கண்டதும் கேட்டதும்' 'நினைவு மஞ்சரி' போன்ற நூல்களிலே. ஆகவே இது ஒவ்வொருவருடைய கற்பனையையும், ரசனையையும், புதிய விஷயங்களைக் கேட்டு அவற்றால் பாதிக்கப்படும் மனச் செறிவையும் பொறுத்தது என்று நினைக்கிறேன் ஒருவர் ஆக்ஸ்ஃபோர்டில் படித்து, ஆங்கிலத்தில் டாக்டர் பட்டம் பெற்றிருக்கலாம். அதற்காக அவர் வைதீஸ்வரன் எலியட்டின் கவிதையினால் பாதிக்கப்படுவது போல்பாதிக்கப்பட வேண்டுமென்ற அவசியமில்லை. அதனால்தான் பெரிய ஆங்கிலப் பேராசிரியர்களாய் இருந்தாலும் புதிதாக எழுதும் தமிழ் எழுத்தாளர்களுடைய கதைகளில் 'ப்ளாட்' இல்லை என்று அவர்கள் குறைபட்டுக் கொண்டால் நாம் அதைக் கண்டு ஆச்சரியப் பட வேண்டியதில்லை. நம் நாட்டில் தலைசிறந்த விஞ்ஞானியும் சந்திரனைப் பாம்பின் வாயிலிருந்து மீட்பதற்குக் கூடும் லட்சக்கணக்கான மக்களில், ஒருவராக இருப்பது நாமறிந்த செய்தி. முப்பது நூற்றாண்டுகளையும் ஒரே சமயத்தில்நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம் என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டு.

*(29—5—71 அன்று சென்னை இலக்கியச் சிந்தனை கூட்டத்தில் வாசிக்கப்பட்ட கட்டுரை)*

## "தெலியலேது ர்ாமா"

'ப்ராங்க்ளின் கொட்டைப்ராந்து
முத்துச்சாமி செத்த எலி'
செல்லப்பா சொல்லி விட்டார்
நாப்பா போட்டு விட்டார்

Identity crisis
Alienation feeling
'இழப்பில்' இது வெல்லாம்
எங்கேயும் இல்லையாம்
செல்லப்பா சொல்லிட்டார்
நாப்பா போட்டுட்டார்.

தமிழ் நாட்டில் தமிழ்க் குலத்தில்
தமிழ்ச் சரித்திர வரலாற்றில்
சோகத்துக்கிடமில்லை—இதயச்
சோரத்துக் கிடமில்லை

ஸந்தோஷம் ஸல்லாபம்
ஸம்போகம் தார் மீகம்
சத்தான சொல்லடுக்கு
தமிழ்க் கதைக்கு மிக மிடுக்கு

செல்லப்பா சொல்லிட்டார்
நாப்பா போட்டுட்டார்

இனி—
ஆறடி உயரம் அழகான பெண்மைமுகம்
(மேற் கொண்டு வர்ணனைக்கு
நாப்பாவைக் கேளுங்கள்)

சத்தான கருத்துக்கள்
நாயகன் அவிழ்த்து விட
ஐந்தடி உயரம் ஐந்தடி கூந்தல்
திரண்ட தமிழறிவும் தியாகேசர் கீர்த்தனையும்
தெரிந்த நல்நாயகி திடீரென வந்து
நிம்போமேனியாவில் நாயகனைக் காதலுற்று
லக்ஷணமாய் குண்டு குண்டாய்ச் சித்திரங்கள்
போட்டு
ட்ராஜடியாய் காமடியாய் ட்ராஜிக் காமெடியாய்
(தெலியலேது ராமா தமிழ் நாவல் மார்க்கமு!)

நாப்பா எழுதிடுவார்
செல்லப்பா வாழ்த்திடுவார்

செத்த எலிகளுக்கு இடமில்லை தமிழினிலே
ஜோடித்த பிணங்களுக்கே சொகுசுண்டு
இனிமேலே!

—ஜாதுஷ்டிரன்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

அவன் வந்தான். அவன் வந்த வழிப்பக்கமாகவே குப்பை மேட்டுப்பக்கம் இடிந்த குட்டிச்சுவர் அருகாகத் தள்ளிக் கொண்டு போனான் அவன்.

''நேத்து ராத்திரி எங்க போயிருந்த?''

''எங்கியுமில்ல...!''

''புளுவாத எங்க போயிருந்த?''

''இது என்னடாயிது வம்பு. நான் ஏன் உங்கிட்ட புளுவனும்? சினிமாவுக்குப்போலாம்னுகூடிப்பேசிக்னு இருந்தது. அது கூடம் சைக்கிள் ஆப்டாத தோது பட்டு வர்லன்னு நின்னுட்டம்''

''நின்னுட்டதுதெரியுண்டா. அப்பறம் எங்கியுமே போவலியா?''

''எங்கியும் போவலியா...எங்கியும் போவலியான்னா என்ன அர்த்தம். தூங்க கடக்கிறோம் விதிய நெனேச்சிக்னு; ராவல்லாம் சீட்டு ஆடிக்னு...அடின்னும் தெரியாம, மொனண்ணும் தெரியாம நீம்பாட்டுனு வந்து கேட்டா என்ன அர்த்தம்...ராத்திரி எனக்குரெண்டே முக்கா ரூவா தோப்பு. அது தெரியுமா ஒனக்கு...!''

''என்னடா காது குத்தற ..பாருவதி ஊட்டுக்குப் போவல நீ!

''ஓ! அதச்சொல்றியா...ஆமாபோனேன். அதுக்கு என்னவந்துது இப்போ!''

''ஏம் போன?'' ஒரு அடி முன்னால் வந்து கேட்டான்.

''ஏன் போனண்ணா...எப்பவும் போற மாரி போனேன். வந்துட்டேன்'' அவன் சாதாரணமாய்ச் சொன்னான்.

கண்கள் சிவந்தன. ''டாய்...எல்லார் கிட்டியும் வெளையாடற மாதிரி எங்கிட்ட வெளையாடாத...எதுக் போன...''

''சும்மா குந்தி பேசிக்னு இருக்கப்போனேன்''

''யாரு கிட்ட?''

''இது என்னடா இது! போவும் போதே ஆரு கிட்ட பேசறதுன்னு ஓசன பண்ணிக்னு போவாங்க... எப்பவும் போற மாரி போனேன். அவரு இல்ல, மாடு புடிக்கப் பூட்டாருன்னு சொல்லிச்சி. கொஞ்ச நேரம் அதுங்கிட்ட குந்திப்பேசிக்னு இருந்துட்டு வந்தேன்.'

''அவ கிட்ட ஒனக்கு என்ன பேச்சி?''

''இது என்னடா கோராமெ! நான் அதுகிட்ட பேசனா ஒனக்கு என்ன...அவரே ஒண்ணும் சொல்றதில்லையாம், இவரு வந்துட்டாரு எங்கருந்தோ பேசக் கூடாதுன்றதுக்கு...ஒனக்கு என்ன பேச்சின்னா எனக்கு ஒண்ணும் புரியலியே!...''

''டாய்பேசக் கூடாதுருன்னா அப்பறம் என்னுமோ பேசறியா...''

''அத யாரு நீ சொல்ல...சொல்லு; ஒனக்கு பொண்டாட்டிபுள்ள இல்ல. குடும்பம் இல்ல. அத்த உட்டுப்புட்டு என்னுமோ இன்னாருத்தம் பொண்டாட்டி கிட்டபொய் பேசாதருன்னு நீ என்னுமோ கட்டு மானம் பண்றியே...உம் பொண்டாட்டி கிட்டவா குந்திப்பேசிக்னு இருக்கறேன்...அப்படி எதுனா இருந்தாகேளு...எடுத்துக்கோ செறுப்ப கையில...''

ஆத்திரத்தில் உடம்பு நடுங்கியது. கட்டுப்படுத்திக் கொண்டு கேட்டான். ''சரி குந்திப் பேசிக்னு இருந்துட்டு எப்ப வந்த ..!''

''அப்பவே வந்துட்டேன்''

''இல்ல புளுவற...''

''அப்பறம் ஓங்கிட்ட எவன் பேசுவான்?''

''டாய்!...அப்பறம் எலும்ப முறிச்சி புட்டூரையில தான்வாரணம். உண்மையச் சொல்லிடு. எப்பவந்த...''

''காலம்பற வந்தன்னு சொல்லச் சொல்றியா...!''

''டாய் ..!'' எட்டிப் பனியனைப் பிடித்தான்.

''கிஷ்டா...வயசுல கொஞ்சம் மூத்தவனச்சேன்னு இதுவரிக்கும் கொஞ்சம் மரியாத குடுத்தேன். நல்ல படியாக்கைய எடுத்துடு. எதுனா கலாட்டா பண்ணிக்ன நான் சும்மா இருக்க மாட்டேன். அப்பறம் ஒனக்கு தான் அவமானம்...எல்லாம் எனக்குத் தெரியும்...வீணா காரி முழிஞ்சிப்புடாத...''

''என்னடா என்னுமோமெரட்டற''. கையை எடுக்காமலே கேட்டான்.

''நான் நல்லத்தனமா சொல்றேன்; நீநெனேக்கரு மாரில்லாம் ஒண்ணுங்கெடையாது......மரியாதையா கையெ எடுத்துடு.''

''ஏம்பா மின்சாமி ஆட்டம் அடிச்சாச்சி. காசி போடணம். சீக்கரமா வாப்பா...''

கிஷ்டன் ஒரு நிமிஷம் தயங்கி நின்றான். பிடியை நெகிழ விட்டான். ''அப்பறமா வெவரம் தெரிஞ்சி கவனிக்கற வழில வந்து ஒன்ன கவனிச்சக்கறண்டா. இப்ப போ நீ!''

தள்ளாடினான். தடுமாறினான். இருளில் கால்களைத் துழாவி வீட்டை அடைந்தாள. ''எங்கதே நீம் மாட்டுனுபூட்ட; ஒண்ணுங்கூட சொல்லாம... அடுப்புல தண்ணிபோட்டு வச்சது ஆறிக் கூடம் பூட்டுருக்கும் போ!... என்னடா போன ஆம்பளைய இன்னுங்காணமேன்னு நான் ஒருத்தி இங்க குந்திங் கெடந்தா...இந்நேரம் வரிக்கும் கெடந்துட்டு வர்ரியே நீம்ப்பாட்டுனு...எங்க போன அம்மாம் அவுசரமா...''

பதில் சொல்லாமல் தோட்டத்துக்குப் போனான். மேல்துண்டைஎடுத்துகயிற்றில்போட்டான். சோமனை அவிழ்த்துப் படலில் போட்டான். சொம்பு சொம்பாய் அள்ளி மேலே ஊற்றிக் கொண்டான். முதுகைத் திரும்பி அவளுக்குக் கொடுத்தான். ''எங்கருந்தியா வந்துது இம்மா அழுக்கு! ரெண்டு நாளைக்கி நான் தேய்க்கலன்னா இந்த அழுக்கா...! உம் புள்ளைய பாத்தியா? பள்ளிடத்துல என்னுமோ பரீட்ச வச்சாங்களாம் இன்னைக்கிக்கோழிமுட்ட வாங்கினுவந்துகிது''

துவட்டிக்கொண்ட பிறகு கௌபீனத்தைப் பிழிந்தான். அவிழ்த்துப்போட்டதை எடுத்து இடுப்பில் சுற்றிக் கொண்டான். ''மல்லாட்டப் பயிறு கமிட்டில நல்ல வெல விக்யிதாமே ... இருக்கிற நாலுமூட்டையும் நாள தறிச்சி அடிச்சி கொண்ணும் போய் போட்டுட்டு வந்துடைன்யா. பெரியவளுக்குன்னா ஒரு செயின் செஞ்சி போடலாம்; அவ கழுத்துத்தான் சும்மா கெடக்குதே..!''

சாப்பிட உட்கார்ந்து சும்மாகிளறினான். ஒப்புக்கு அள்ளி கட்டாயத்துக்குக் கிடித்தான். மூலக்குப்போய் மோட்டு வளையைப் பார்த்தான். ''என்னயா...பொண்டாட்டிய பறிகுடுத்தவனாட்டம் நீம் பாட்டுனு போய் குந்திக்ன...குத்திக்கல்லாட்டம் எதிர இருக்க சொல்லவே!''

# ஆஷா முக்கர்ஜி

நகுலன்

நானும் சிவனும் கடைத்தெரு வழியாகப்போய்க் கொண்டிருந்தோம். ஐந்து வருஷங்களுக்கு முன் இப்படி இந்தப் பாதை வழியாகக் கடைத்தெருக் கூட்டத்தில் கலந்து கொண்டு போவதில் ஒரு அர்த்தம் இருந்தது. அப்பொழுதெல்லாம் நயினார் கடையில் எங்கள் நடை முடியும்; பிறகு ராத்திரி ஒரு ஏழு அல்லது எட்டு மணிவரை பேசிக் கொண்டிருப்போம். அதற்குப் பிறகு பல விஷயங்கள் நடந்தன. நயினாரைப் பார்ப்பதே ஒரு பிரச்னையாக இல்லை; எழுதினான்; கடைத் தெருவின் நடுவில் இருந்து கொண்டே எழுதினான்; கொஞ்ச காலம் அவனைப் பற்றிப் பேசினார்கள்; பிறகு பேச்சும் நின்றது; அவனைச் சுற்றி ஒரு கூட்டம்; அவன் தனி ஆனான்; அவன் நண்பனைப்பற்றி—கோ. மார்க்க பந்து—விடாமல் பேசிக் கொண்டே இருந்தார்கள். இன்னும் பேச்சு ஓயவில்லை. கோ. மார்க்க பந்து சந்தோஷமாக இருந்தான். வாசகர்கள் அவனை வரித்து விட்டார்கள். நயினாருக்கு இரு குழந்தைகள், கடை, தங்கிப்போன கையெழுத்துப் பிரதிகள்.

அவன் கடையில் ஏறினோம்.

“வாருங்கள் உட்காருங்கள். பாலு, மூணு கப் சாயா”

மூன்று கப் சாயா வந்தது.

எனக்கு முறுக்கான்.

சிவனுக்குப் பீடி.

நயினார் என்னிடம் “உங்களைப் பற்றி யாரோ எழுதியிருக்கிறார் போல் இருக்கிறதே” என்றார்.

நான் ஒன்றும் சொல்லவில்லை. என்னவோ நினைத்துக் கொண்ட மாதிரி “உங்களுக்கு எவ்வளவு குழந்தைகள்?” என்றேன்.

“இரண்டு”

“இன்னும் ஒன்று கூட...” என்று இழுத்தேன்.

“என்னவோ மூத்தவன் சரியா இருக்கான். இளையவனுக்குத்தான் அது-இது என்று மாதாந்திரச் செலவு ஏதாவது வைத்தியனுக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. நீங்கள் அதிர்ஷ்டசாலி.”

நான் ஒன்றும் சொல்லவில்லை. சிவன் பீடிபற்றத் தீக்குச்சி கேட்டார். சிவன் ஆபீசில் அஞ்சு மணி ஆனவுடன் எல்லோரும் போனதும் பீரோவைத் திறப்பார். ஒரு குப்பி, ஸ்படிகத் தெளிவானசரக்கு, நிலைக் கடலை. கண்சிவக்கும். நான்மாத்திரம் என்ன? போன வாரம்தான் என்று நினைக்கிறேன். கூட வேலை செய்கிறவர் I. A. S. பரீக்ஷையில் தேறி விட்டார். எங்களுக்கு ஒரு பார்ட்டி. ஒரு விருந்து. அவர் அழைக்கச் சொன்னவர் என்னை அழைக்க மறந்ததை அவருக்கு நானே ஞாபக மூட்டினேன். பிறகு அந்த எதிர்கால I. A. S. காரரும் “மறக்காமல்வரவேண்டும்” என்றார். மறக்காமலே போனேன். அவருக்கு இந்தப் பழக்கம் கிடையாது. 1, 2, 3, 4 குப்பி ஜின். எலுமிச்சத் துணுக்குகள்.

தலை கனக்கக் குடித்துக் கொண்டிருந்தேன். இருந்த இடத்தை விட்டு எழுந்திருக்கவில்லை. வெற்றிலை போட்டுக் குழப்புகிறேன். சிகரெட் குடிக்கிறேன். ஒருவர் “இன்னும் கொஞ்சம்?” என்கிறார். “வேண்டாம்” என்கிறேன். நயினார் நான் அதிருஷ்டசாலி என்கிறார். நானும் தான். இந்திரா பார்த்தசாரதி எழுதுவதைப் படிக்கிறேன். அவர் எழுதுகிறார் “எழுத்தில் கரைகிறேன்” என்று. ‘நான்? ஒரு குப்பி ஜின்? நயினார்? இரண்டு குழந்தைகள்? எதை விட எது முக்கியம் என்று எனக்குக் இன்றளவும் நிச்சயமாக வில்லை. இதெல்லாம் எனக்குக் குடித்தமாதிரி ஒரு போதையை உண்டாக்குகிறது.

கேட்கிறேன், “உங்கள் கதைத் தொகுதி என்ன வாயிற்று?”

அவர் ஒன்றும் சொல்லவில்லை.

நான் மீண்டும் கேட்கிறேன், “மூணாவது வருஷம் கொடுத்தது இல்லையா?”

“இரண்டு வருஷம் பொறுத்திருந்தேன். பிறகு வாங்கி வந்து விட்டேன்.”

நான் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கு நயினாரைப் பிடிக்காமலிருக்கலாம். ஆனால் அவர் கதைகள் நன்றாகத்தான் இருந்தன.

நயினார் மீண்டும் பேச ஆரம்பித்தார். “போன வாரம் கோனா மானா வந்திருந்தான். ஏதோ நாவலாம். படித்துக் காண்பித்தான். எனக்குச் சற்றுத் தலைவலி. என்னால் தாங்க முடியவில்லை. இவர் கதையா எழுதறார்?”

சிவன் சிரித்தான்.

நான் சிரிக்கவில்லை.

நயினாரிடம் கேட்டேன். “உங்கள்வட்டத்திலேயே அவர்தான் நிறையச் சம்பாதித்தார் இல்லையா?” என்றேன்.

“ஆமாம்” என்றார். அவர் குரலில் ஒரு மரியாதை தொனித்ததைக் கவனித்தேன். என்னவோ திடீரென்று நினைத்துக் கொண்டவர் மாதிரி “போன மாதம் சென்னைக்குப் போயிருந்தேன். தெரியுமா?” என்றார். எனக்கு இது தெரிந்ததுதான். நான் இதை வேறுவிதமாகப் புரிந்து கொண்டிருந்தேன். அவர் சொன்னதும்தான் உண்மை தெரிந்தது. “ரங்கசாமியின் மனைவி தவறி விட்டாள். அவரைப் பார்க்கத்தான் சென்றேன்.”

மீண்டும் சொன்னார், “கூடவே கோனா மானாவும் வந்திருந்தான். அது குடும்பக் கட்டுப்பாடு நிர்மாணத்

திட்டவாரம் என்று நினைக்கிறேன். அதைப் பற்றி ஒரு கதை எழுதியிருந்தான். ''பெருஞ் சுடர்'' ஆசிரியரை நேரில் பார்த்து விட்டுக் கொடுத்து விட்டு வந்தோம். அடுத்த இதழில் வரும்'' என்ருன். சந்தோஷமாகத் தான் சொன்னுர். நாங்கள் இருவரும் எழுந்தோம். சிவன் நயினுரை ஒரு மாதிரியாகப் பார்ப்பதைக் கவனித்தேன்.

நயினுர் ''எப்பொழுதாவது இந்த வழியாக வந்தால் வாருங்கள்'' என்ருன். நான் தலையை அசைத்தேன்.

நாங்கள் இருவரும் போய்க் கொண்டிருந்தோம். நன்ருக இருட்டி விட்டது. சிவன் ஒன்றும் பேசவில்லை. திடீரென்று ''நவீனு!'' என்ருன்.

''என்ன?'' என்றேன்.

''உனக்குத் தெரியுமோ? இப்பொழுது என் சிறுகதைகளைப் பற்றி யார் யார் எல்லாமோ என்னன்னவோ சொல்கிருர்கள். ஆனுல்—''

''ஆனுல்?''

''என்னுல் இப்பொழுது எழுதவே முடியவில்லை'' நாங்கள் வழுதக்காடு ஜங்ஷனில் நின்று கொண்டிருந்தோம். அவன் பஸ்ஸிற்குக் காத்திருக்க வேண்டிய அவசியமில்லை. புதுஸைகிள் வாங்கிவிட்டான்.

நான் அவனிடம் ''நயினுரைப் பார்த்து விட்டு வந்ததிலிருந்து எனக்கு ஒரு கதை எழுத ஆவலாக இருக்கிறது....''

''கதைக்குப் பெயரென்ன?''

''விஷயம்?''

''ஆஷா முக்கர்ஜி''

''கதை''

''நாலு வருஷத்திற்கு முன் கல்கத்தாவிற்குப் போயிருந்தேன். ஒரு எழுத்தாளர் கூட்டத்திற்கு''

''அப்புறம்''

''அங்கு வைத்துத் தான் அவளைப் பார்த்தேன். பேராசிரியர் நரேஷ் கோஷுடன் என்னவோ பேசிக் கொண்டிருந்தேன். ஒரு ஸில்க் புடவை - உனக்குத் தான் தெரியுமே. சாம்பல் வர்ணம். செங்கல வர்ணப் பார்டர். கோவில் சித்திரங்கள். அவள் அழகாக இருந்தாள். நான் அவளிடம் பேச விரும்புவதை அவள் அறிந்திருக்க வேண்டும். என்னுடன் விகற்பமில்லாமலேயே பழகினுள்.

''பிறகு நான் அவளைப் பார்க்கவில்லை. இன்று அவள் ஞாபகம் வருகிறது'' என்றேன். சிவன் ஒன்றும் சொல்லவில்லை. ''வெற்றிலை போடுகிருயா?'' என்ருன். எனக்கு வெற்றிலை வாங்கிக் கொடுத்து விட்டு அவன் போய்விட்டான்.

நான் இருட்டில் சைகிளை உருட்டிக் கொண்டே சென்றேன். நான் எதில் கரைந்து கொண்டிருக்கிறேன்? ●

# அக்கம்பக்கம்

1939 இல் ரசிகன் கதைகள் எழுதப்பட்டன. ஆனுல் ஒன்பதாண்டுகளுக்கு முன்னுல்தான் புத்தக ரூபத்தில் வெளி வந்திருக்கிறது.

நா. ரகுநாதன் (ரசிகன்) கதைகளை நான் இப்பொழுது தான் தேடிப் பிடித்துப் படித்தேன். ரொம்ப நல்லகதைகள். சிறப்பான கதைகள். அறவுணர்வு சற்றுத் தூக்கலாகத் தெரிந்தாலும் கூடக்கலையம்சம் நிறைந்திருக்கிறது. கொச்சை மொழியை வெகு லாவகமாக —நேராக—செட்டாக ரகுநாதன் உபயோகித்திருக்கிருர், சொற்களை இவர் மாதிரி அழுத்தமாக எழுதி இருப்பவர் யாரும் இல்லை என்று தான் எனக்குப் படுகிறது.

வாசகர்களாலும், விமர்சகர்களாலும் மறந்து விட்டாலும் ரசிகன் கதை களுக்குத்தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தில் சிறப்பான ஓர் இடம் நிச்சயம் இருக்கிறது. இவருடைய நாடகங்கள் 'ரசிகன் நாடகங்கள்' என்றதொரு தொகுதியாகவும் வெளிவந்திருக்கிறது.

சிறுகதை, நாடகங்கள் எல்லாம் தஞ்சாவூர் ஜில்லாவினர் வாழ்க்கை, அவர்கள் குணம், ஆசாபாசம் இவைகளை இன்றைக்கும் பொருந்தி வரும்படியாகச் சொல்லுகின்றன. டால்ஸ்டாய் பாதிப்போடு இருக்கும் 'வெகுநாளைக் குடியானவன்' கதை தலைமுறைகளினிடையே ஏற்படும் மோதலையும்—சிந்தனை ஓட்டத்தையும் சொல்லும் கதை. இது தமிழின் மிகச் சிறந்த சிறுகதைகளில் ஒன்று என்பது என் அபிப்ராயம்.

ஃ ஃ ஃ

சாஹித்ய அகாடமி 'இந்திய இலக்கிய கர்த்தாக்கள்'

(Makers of Indian Literature) என்ற வரிசையில் பலமொழி இலக்கிய கர்த்தாக்களைப்பற்றியும் ஆங்கிலத்தில் நூல் வெளியிட்டிருக்கிறது. பின்னால் இவைகளுக்குப் பிற இந்திய மொழிகளில் மொழி பெயர்ப்பும் வெளிவரும்.

பொதுவாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த சிந்தனையாளர்களை இலக்கிய கர்த்தாக்களாகப் பல மொழியினரும் ஏற்றுக் கொண்டு நூல் எழுதியிருக்கிறார்கள். வங்காளத்தில் ஈஸ்வர சந்திர வித்யாசாகர்; ராஜாராம் மோகன் ராய்; அஸ்ஸாமியில் லக்ஷ்மிநாத் பேஜ்பரோ, மாரத்தியில் கேஷவ்ஸத், தெலுங்கில் வீரேசலிங்கம் பந்துலு; பிறகு இந்தியில் பிரேம் சந்த். ஆனால் தமிழில் இளங்கோ அடிகள். நூலாசிரியர் பேராசிரியரான மு. வரதராசன் அவர்கள்.

நமக்குப் பழைய இலக்கியம்-இலக்கிய கர்த்தா இருப்பது நல்லது தான், பெருமை தருவது தான். அதுவே எல்லா இடத்திற்கும், எல்லாக் காலத்திற்கும், எல்லாவற்றிற்கும் போதுமா என்பது தான் கேள்வி. இளங்கோ அடிகள் மூலம் நம்முடைய நவீன சிந்தனையின் தடத்தைக் காட்ட முடியுமா? மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், பேராசிரியர் மு. வரதராசனுக்கு இவையெல்லாம் முக்கியமில்லை. புத்தகம் எழுத வேண்டும். அதிகச் சிரமப் படக் கூடாது. சுலபமாக 'இளங்கோ அடிகள்' பற்றி எழுதி விட்டார்.

சமயத்துறையில் புரட்சியை ஏற்படுத்திய இராமலிங்க சுவாமியைப் பற்றியோ, முதல் நாவலாசிரியரான மாயூரம் வேதநாயகம் பிள்ளையைப் பற்றியோ, பாரதியாரைப் பற்றியோ—இந்த வரிசையில் தமிழில் புத்தகம் வெளியாகியிருந்தால் தமிழனுக்குக் காலத்தோடு இருந்த தொடர்பையும் சிந்திக்கும் திறனையும் அறிந்து பெருமைப் பட வழியிருக்கும்.

சாஹித்ய அகாடமி போன்ற நிறுவனம் பண்டிதர்களையும், கல்லூரிப் பேராசிரியர்களையும் தேடிப்பிடித்துத் தமிழில்புத்தகம் எழுதச் சொன்னால் இப்படித்தான் இருக்கும். இதற்கு விடிவு காலமும் இல்லை.

ஃ ஃ ஃ

பத்திரிகை ஆசிரியரென்றால் எத்தனையோ கடிதங்களைப் பார்க்கலாம். சென்ற மாதம் வந்த மிகவும் சுவாரஸ்யமான கடிதம். நா. காமராசனுடையது. ஞானக்கூத்தனின் விமர்சனத்திற்காக எனக்கு வந்த கடிதத்தை அப்படியே தந்திருக்கிறேன். நீங்களும் தான் படியுங்களேன்:

அன்புடையீர்!

தங்கள் இதழில் எனது கவிதைகளைப் பற்றி எழுதியிருந்த விமர்சனம் கண்டேன். விமர்சனம் எழுதியதற்கு நன்றி. ஒரு இலக்கிய மாணவனாகவே இதை நான் எழுதுகிறேன். எனது மரபு 'பாரதிதாசன் மரபு' என்றும் அந்த மரபு 'வெறும் குழப்பம்—ஹம்பக்' இவைதாம் என்றும் விமர்சனத்தில் எழுதப்பட்டிருந்தது. அப்படியானால் பாரதிதாசனுக்கு வழி காட்டிய பாரதியின் மரபும் குழப்பம்... ஹம்பக்தானா? பாரதி வழி வந்த ரகுநாதன், கே.சி.எஸ். அருணாசலம் இவர்களின் கவிதைகளைப் பற்றித் தங்களின் கருத்தென்ன? பாரதி—பாரதிதாசன் வழியில் வந்த கண்ணதாசன் கவிதைகள் இலக்கிய மதிப்பற்றவையா? அப்படியானால் உங்களுடைய சிறப்பான — அனைவரிலும் மேம்பட்ட கவிதா மரபுதான் என்ன? 'மரபு' என்ற சொல் பிடிக்காவிட்டால் கவிதையைப் பற்றிய உங்கள் கொள்கைகள் என்ன? இது வரை தமிழ் நாட்டில் சிறந்த கவிகளே தோன்றவில்லையா? (உங்களுடைய மகா கவிகளைத் தவிர). எழுத்தாளர் தி. ஜானகிராமன் எனது கவிதை நூல்களைத் தங்களிடம் புகழ்ந்து கூறியதும், தாங்கள் பதில் சொல்ல முடியாமல் "திருதிரு" என விழித்ததும் உண்மைதானா?

இந்தக் கடிதத்தை அடுத்த க,ச,ட,த,ப,ற இதழில் பிரசுரிக்கவும். பக்கத்திலேயே தங்கள் விளக்கத்தையும் வெளியிடவும்.

அன்புள்ள,

நா. காமராசன்

ஃ ஃ ஃ

—நா. கிருஷ்ணமூர்த்தி

## கரை நண்டுகள்

நீ
நான்
யாவரும்
நண்டுகள்.

நீர்
ஊறிய
மணலில்
வாழ்ந்தாலும்
நாம்
எவற்றையும்
பிளைப்பதில்லை.

முத்துக்கள்,
மீன்களின்
கடலில்
நாம்
இறங்குவதில்லை
மழைக்கு
மறைவிடம்
தேடுகிறோம்.

—ந. மகாகணபதி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.